# கல்கி

KALKI
22.5.2005
ரூ.6.00

# யார் இந்த சூர்யா?

ஹீரோவின் பர்சனல் டைரி ஆரம்பம்!






கல்கி 22.5.2005

‘ஆட்டை மேய்த்தது போலவும் ஆச்சு; அண்ணனுக்குப் பொண்ணு பார்த்தாற் போலவும் ஆச்சு’ பழமொழிதான் கோதுமை உப்புமாவைக் கிண்ட வைத்து, அதன் மூலம் புஷ்பா தங்கதுரையைக் கிளற வைத்த ‘பேச்சுலர் சமையல்’ பகுதி!

- நெய்வேலியிலிருந்து எஸ்.இந்துமதி

அடாவடித்தனம், தில்லுமுல்லு பண்ணி அரசியல் நடத்துகிறார் லாலு! வேறு வேலை இல்லாத காரணத்தினால் அவரை முன்னிறுத்தி அரசியல் பண்ணுகின்றனர் எதிர்க்கட்சியினர். ஆனால் இருதரப்பிலிருந்தும் எவரிடமும் ஜனநாயகத்தைக் காப்பாற்றும் எண்ணம் துளிக்கூட இல்லாததுதான் வேதனையான நிஜம்.

- நெல்லையப்பபுரத்திலிருந்து டி.செல்வன்

ஏற்கெனவே குளுகுளுன்னு கல்கி மெருகேறிட்டு வருது. இதுல நயன்தாராவைப் போட்டு சூப்பர் ஸ்டாரா? சுப்ரீம் ஸ்டாரா?ன்னு பொடி வெச்சிங்களா.. விறுவிறு ஜிலுஜிலு!

-திசையன்விளையிலிருந்து ஆர்.ஜி.அம்பிகைராமன்

‘மாநாடுகள் எதற்காக’ செய்திப் பகுதி அருமை! ‘கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் மாநாடுகள் என்று மட்டும் எண்ணிவிடாதே. இடைக்காலத்தில் இந்த இனத்துக்கு ஏற்பட்ட புண்ணுக்கு மருந்து தயாரிக்கும் நிகழ்ச்சி’ என்று கலைஞர் கூறியிருந்தாலும் மக்கள் மனதில் பதித்தவர்களே அடுத்து வர முடியும்!

- வடிவீஸ்வரத்திலிருந்து பிரதீபா

‘ஓய்வு பெறும் நேரத்தை நெருங்கிவிட்டாரா டெண்டுல்கர்’ என்ற கேள்விக்கு ‘தம்மை புதுப்பித்துக் கொள்ளும் நேரத்தை நெருங்கிவிட்டார்’ என்கிற தங்களின் பதில், கோடிக்கணக்கான கிரிக்கெட் ரசிகர்களின் எண்ணத்தைப் பிரதிபலித்தது.

- நாகர்கோவிலிலிருந்து எஸ்.டி.ரவி

மண்ணைப் பொன்னாக்கி மனம் நிறைவு பெறும் வேளாண்குடி மக்களின் உள்ளக்கிடக்கையைச் சற்றும் மிகையின்றி உணர்த்திய ‘பிளாஸ்டிக் மிளகாய்’ சிறு



## வாரம் ஒரு வாசகர்



சுவாமி ரங்கநாதானந்தாவின் திருக்கரங்களில் தவழும் பாக்கியம், விருதுகளுக்கு இல்லை.

- சென்னையிலிருந்து
கே.என்.பாலகிருஷ்ணன்

கதையின் நிகழ்வுகளும் முடிவும் வெகு அருமை! வே.குருநாதன் பெரிதும் பாராட்டிற்குரியவர்.

- தேனியிலிருந்து
எஸ்.எம். பாலசுப்ரமணியன்

டி.வி. சீரியல்களில் நொடிக்கு நூறு முறை கண் கலங்கும் தேவிபிரியாவை கேள்விக் கணைகளால் கண் கலங்க வைக்க முயன்று, அவரது ராக்கெட் பதில்களில் திணறி, கிளிசரின் இல்லாமலேயே கண் கலங்கிய (ஆனந்த கண்ணீர்!) நிருபருக்கு 'கைக்குட்டை'யைப் பரிசாக அளிக்க சிபாரிசு செய்கிறேன்!

- நாகமலையிலிருந்து
ப.கா.மணிமொழியன்

டெலிமெடிஸின் சேவை பாராட்டுக்குரியது.

- சென்னையிலிருந்து கே.வி.ராமன்

காதலிக்கிறபோது கிடைக்கிற சுகத்தைவிட, காதலித்த அனுபவத்தைச் சொல்லும்போது கிடைக்கிற சுகம் அலாதியானது என்பதை நல்லி குப்புசாமியின் காதல் சிறகுகள் மூலம் புரிந்து கொண்டேன்.

- தஞ்சாவூரிலிருந்து பா.து.பிரகாஷ்

எவ்வளவு ஆத்மார்த்தமாக பரமாச்சாரியார் அன்றே பேசி இருக்கிறார் என அருள்வாக்கில் கண்டு கொண்டேன்.

- சென்னையிலிருந்து
சிம்மவாஹினி

'எழுதிக்குங்க மாமா!' ஜோக் படித்து, போலீஸ் மாமாவை நினைத்துச் சிரித்தேன்! கலக்குங்க!

- ஈரோடிலிருந்து ராஜ்குமார்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் சேமிப்புக்கு

**'சந்திரமுகி' அமோக வெற்றி பெற்றிருக்கும் நிலையில், 'ஜக்குபாய்' படத்திலிருந்து ரஜினியால் கழற்றிவிடப்பட்ட இயக்குனர் கே.எஸ். ரவிக்குமார், தற்பொழுது எந்த மனநிலையில் உள்ளார் என்றறிய விரும்பினோம். பல விஷயங்கள் குறித்து நம்மிடம் மனம் திறந்து பேசினார்...**

**நீங்கள் அஜீத்தை வைத்து இயக்கும் 'காட்ஃபாதர்' படம் தொடர்ந்து இழுத்துக்கொண்டே போகிறதே... என்னதான் பிரச்னை?**

"படத்தோட தயாரிப்பாளர் நிக் ஆர்ட்ஸ் சக்ரவர்த்திதான் எல்லாப் பிரச்னைக்கும் காரணம். ஆர்ட்டிஸ்டுங்ககிட்ட நான் ஏற்கெனவே வாங்கின டேட்ஸை எல்லாம் கரெக்டா யூஸ் பண்ணாம சொதப்பிட்டாரு. திரும்ப டேட்ஸ் வாங்கறது சிரமமா இருக்கு. அதனாலதான் ஷூட்டிங்கை தொடர முடியல... இதுல தப்பு செஞ்சது தயாரிப்பாளர்தான். அவர் பட விஷயத்தை விட்டுட்டு, வேற விஷயத்துல கவனம் செலுத்தி, டேட்ஸை கோட்டை விட்டுட்டாரு. இதுல என்ன வருத்தம்னா, என்னோட இத்தனை வருஷ அனுபவத்துல ஷூட்டிங்ல சிக்கலோ, கேப்போ வந்ததே இல்ல. இதுதான் முதல் முறை. இதுல இப்பத்தான் பாதிப் படமே முடிஞ்சிருக்கு." *(சலித்துக் கொள்கிறார்)*

**அப்படி என்றால் காட்ஃபாதர் ரிலீஸ்?**

"அது என் கையில் இல்ல. *(கையை விரிக்கிறார்)* இனிமே தயாரிப்பாளர்தான் எல்லா ஆர்ட்டிஸ்டுங்ககிட்டயும் போயி,





கெஞ்சிக் கூத்தாடி, டேட்ஸ் வாங்கி, படத்தை முடிக்கணும். எப்படியாவது வர்ற தீபாவளிக்கு படத்தை ரிலீஸ் பண்ணிடலாம்னு நினைக்கிறேன். பார்ப்போம்." *(நீண்ட பெருமூச்சு)*

**ஆங்கிலத் தலைப்புக்கு எதிர்ப்பு கிளம்பி வரும் சூழ்நிலையில் எதற்கு நீங்கள் 'காட்ஃபாதர்' என்று ஆங்கிலப் பெயர் சூட்டியுள்ளீர்கள்?**

"தமிழ் இயக்கத்துல இருந்து சில பேர் என்கிட்ட வந்து பேசனாங்க.

இதுல என்ன காமெடின்னா வந்தவங்களுக்கே 'வில்லன்'ங்கறது தமிழா, இங்கிலீஷான்னு தெரியல. அப்படியே இங்கிலீஷ் பெயர் வச்சாலும் இது ஒண்ணும் BF மாதிரி மட்டமான பேரு இல்ல... கதைக்குத் தேவையான பேர்

லணும்? (குரலை உயர்த்துகிறார்) அது தான் ரஜினியே சொல்லிட்டாரே... அப்புறமென்ன... ஒண்ணு தெரியுமா... ஜக்குபாய் கதையே ரஜினி சொன்னது தான். அவர் சொன்ன ஒன் லைனை அப்படியே ஸ்க்ரீன் ப்ளே பண்ணினா அது

# "ரஜினியால் சும்மா கிடந்தேன்!"

## – வெடிக்கிறார் கே.எஸ்.ரவிக்குமார்

தான் அது. அதனால படத்துக்கு சிக்கல் வரும்ங்கறது எல்லாம் சும்மா... மும்பை எக்ஸ்பிரஸுக்கு கூட அப்படித்தான் முன்னால பேசினாங்க... ஆனாலும் படம் ரிலீஸாகி ஓடிக்கிட்டு இருக்கே... என்ன பிரச்னை வந்துடுச்சு? அதனால எனக்கு எந்தப் பயமும் இல்ல."

**'ஜக்குபாய்' கதை 'பாட்ஷா'வைப் போல இருப்பதாக ரஜினியே கூறியிருந்தார். ஆனாலும் அதற்கு நீங்கள் இது வரை பதிலளித்ததாகத் தெரியவில்லையே...?**

"இதுக்கு நான் ஏன் பதில் சொல்லணும்? ... பாட்ஷா மாதிரியே இருந்துச்சு. கிட்டத்தட்ட பத்து தடவை ஸ்க்ரீன் ப்ளேவை மாத்தியும் அதே ரிசல்ட்தான் கிடைச்சது. அதுக்கு நான் என்ன செய்ய முடியும்? இன்னொரு விஷயம் இந்த விஷயத்தை நான்தான் ரஜினிகிட்டயே சொன்னேன். ஆனாலும் ஜக்குபாயை, பாட்ஷாவை விட சூப்பர் டூப்பர் ஹிட்டா பண்ணி, 'பின்னிட்டான்யா'ன்னு பேர் வாங்கியிருக்க முடியும். ஆனா எடுத்த எடுப்பி

லேயே பாட்ஷாவோட கம்பேர் பண்ணிப் பார்த்துட்டு, ஜக்குபாய் வேண்டாம்னு சொல்லிட்டாரு. சரி, வேற கதையாவது பண்ணலாம்னு சொன்னேன். ஆனா அதுக்குள்ள பி.வாசுவை வச்சி 'சந்திரமுகி' செய்யப் போறேன்னு சொன்னாரு. நானும் சரின்னு சொல்லிட்டேன்." *(பெரு மூச்சு விடுகிறார்.)*

**'சந்திரமுகி' ஜெயித்து விட்டதே...?**

"ஆமா... நான்கூட படம் பார்த்தேன். நல்லாவே இருக்கு. படத்தைப் பார்த்துட்டு வந்த ஜனங்க சொல்றதையெல்லாம் வச்சிப் பார்த்தா 'சந்திரமுகி' ரஜினி படம் மாதிரியே இல்ல. ஆனா அது ஒரு நல்ல கதை. அதுல ரஜினி நடிச்சிருக்கார்... அவ்ளோதான்." *(சிரிக்கிறார்.)*

**'சந்திரமுகி' வெற்றி பெற்றுள்ள சூழ்நிலையில் ரஜினியின் அடுத்த படத்திற்கான கதை டிஸ்கஷனுக்கு உங்களை அழைத்தால் செல்வீர்களா...?**

*(நீண்ட யோசனைக்குப் பிறகு)* "பத்திரிகைகாரங்கதான் அப்படி சொல்லிக்கிட்டு இருக்காங்க. சந்திரமுகி ரிலீஸான பிறகு ரஜினி மூணு தடவை என்கிட்ட பேசினாரு. அப்புறம் ரிஷிகேஷ்ல இருந்து கூட என்கிட்ட பேசினாரு... ஆனா அப்போவெல்லாம் பொதுவான விஷயங்களைப் பத்தித்தான் நண்பர்ங்கற முறையில பேசினாரே தவிர, இதுவரைக்கும் அடுத்த படம் பத்தி என்கிட்ட ஒரு வார்த்தைகூட பேசல. அதனால அடுத்த படம் எப்போ பண்றாரு... யாரு டைரக்டர்.... யாரு தயாரிப்பாளர்னு அவர் வாயில இருந்து வரணும். அதன் பிறகுதான் ஸ்டோரி டிஸ்கஷனுக்குப் போறதா வேண்டாமான்னு யோசிக்க முடியும்."

**உங்களுடைய மசாலா ஃபார்முலாவையும் தாண்டி கலைப்படம் ஏதும் செய்ய திட்டம் உள்ளதா..?**

"என்னால 'அக்ரஹாரத்தில் கழுதை' மாதிரி ஆர்ட் ஃபிலிம், அவார்டு ஃபிலிம்லாம் எடுக்க முடியாது. அப்படி எடுக்கறதுக்கு நான் ஒண்ணும் முட்டாள் இல்லை. அப்படியொரு முட்டாள்தனமான ரிஸ்கை வேறெந்த தயாரிப்பாளர்களுக்காக எடுக்கவும் மாட்டேன். என் சொந்தச் செலவுலயும் எடுக்க மாட்டேன்.

ரெண்டு ஆர்ட் ஃபிலிம் பேரைச் சொல்லுங்கன்னா அழகி, ஆட்டோகிராஃப்னு சொல்வீங்க. ஆனா அதுவே பெரிய தப்பு. அந்த ரெண்டு படங்களுமே மசாலா படங்கள்தான். எப்போ அந்த ரெண்டு படத்துலயும் இயற்கைக்கு மீறின பாட்டு ஸீன்கள் வந்துடுச்சோ, அப்பவோ அவை மசாலா படங்களாயிடுச்சு. ஸோ... மசாலாப் படம்ங்கறது எத்தனை பர்சன்டேஜ் கமர்ஷியல் எலிமெண்ட்ஸை பயன் படுத்தறோம்ங்கறதைப் பொறுத்து இருக்கு."



"சந்திரமுகி ரஜினி படம் மாதிரியே இல்லை!"

**உங்களைப் போன்ற இயக்குனர்கள், ஹீரோவுக்காக மிகவும் வளைந்து கொடுப்பதாகச் சொல்கிறார்களே...?**

"அப்படி வளையாதவங்கன்னு சொல்றவங்ககிட்ட மார்க்கெட் ஹீரோவோட கால்ஷீட்டை கொடுத்துப் பாருங்க... வளையறாங்களா... இல்ல நிமிர்ந்து நிக்கறாங்களான்னு பார்ப்போம். இதெல்லாம் மாஸ் ஹீரோவோட கால்ஷீட் கிடைக்காதவங்க பேசற பேச்சு... அவ்ளோதான்."

**சரி... திடீரென விளம்பரப் படம் எடுக்கச் சென்று விட்டீர்களே... என்ன விஷயம்...?**

"அதுக்குக் காரணமும் இந்த ஜக்குபாய்தான். திடீர்னு ஜக்குபாயை ட்ராப் பண்ணிட்டார் ரஜினி சார். பெரிய கேப் விழுந்துடுச்சு... வீட்ல சும்மாதான் இருந்தேன். என் நண்பர் ஒருத்தர் கேட்டுக்கிட்டதால 'மிர்னாயோ' விளம்பரத்தை செய்து கொடுத்தேன். மற்றபடி எனக்கு விளம்பரப் படம், சேனல் மேல எல்லாம் பெரிய அளவுல விருப்பம் கிடையாது."

- இரா. முத்துக்குமார்



# வெங்காயம் உரிக்காமலே கண்ணீர்!

"கும்தலக்கடி கும்தலக்கடி பாட்டு... அதை கும்மிடிப்பூண்டி கூட்ஸ் வண்டியில ஏத்து..." என்னடா இது? சுமி, சின்னான் ரேஞ்சுக்கு குத்துப் பாட்டுல இறங்கிட்டாளேன்னு சர்ப்ரைஸ் ஆயிட்டீங்களா? நோ சில்லி ஃபீலிங்ஸ் டமில் மக்காஸ். இந்த இஷ்யூ ரிலீஸ் ஆகும்போது எலெக்ஷன் ரிசல்ட்ஸ் வந்திருக்குமே. ரைஸிங் சன்னோ, டூ லீவ்ஸோ யார் வேணுமானாலும் பாடறா மாதிரி டாபிகலா பாடி வெச்சேன். ஓய் டோன்ட்யூ ஜாயின் மீ?



பாட்டுன்னதும் ஒரு மேட்டர் ஞாபகத்துக்கு வருது. இன்னிய தேதிக்கு ரொம்ப குஷாலா, குடும்பத் தோட, டிஜிட்டல் ரீமிக்ஸ்ல ஆனந்த ராகம் பாடிக்கிட்டு இருக்கிற டைரக்டர் யாரு தெரியுமா? 'அந்நியம்' ஷங்கர்? 'சந்திரமுகி' பி.வாசு? ஸாரி ரீடர்ஸ்! நம்ப தனுஷோட அப்பா கஸ்தூரிராஜாதான் அந்த ஹேப்பி டைரக்டர். அவருக்கு நியூ மூவிஸ் கமிட் ஆகுதோ இல்லையோ, பெரிய பெரிய இடத்துல இருந்தெல்லாம் அலையன்ஸ் வருது. சூப்பர் ஸ்டாருக்கே சம்பந்தியா விருந்து நனைச்ச கையோட ஈரம் காயலை, அதுக்குள்ள ஹெர்பல் பேபி ஸ்பெஷலிஸ்ட் டாக்டர் ஜமுனா வீட்டு சம்பந்தம் கிடைச்சுருக்கு. தனுஷோட சிஸ்டர் டாக்டர் கார்த்திகாதேவி வெட்ஸ் டாக்டர் கார்த்திக். அப்படியே நம்ப செல்வராகவனுக்கும் அகர்வால் ஸ்வீட் ஓ.கே ஆயிட்டா... சபாஷேய்!

ரொம்ப நாளாச்சு சுமி, ரசிகர் மன்ற உறுப்பினர்கள்கிட்ட உண்டியல் குலுக்கி. ஒரு சோஷியல் காஸுக்காக, நாலு காசு தரமாட்டீங்களா என்ன? பிரான்ஸுல 58வது சர்வ தேச திரைப்பட விழாவைத் துவக்கி வைக்க வந்த நம்ம ஐஸ்வர்யாராய், அரைகுறையா அரை மீட்டர் டிரஸ்ல வந்து நின்னதை நீங்களும் பார்த்திருப்பீங்க. பாவம், வறுமையில வாடறாங்க போலிருக்கு. நல்ல புடைவையா வாங்கி அனுப்பி வைப்போம்; ஏதோ நம்மால முடிஞ்ச ஸ்மால் ஹெல்ப். ஆனா, அதே விழாவுக்கு நடுவர்களில் ஒருவரா நியமிக்கப்பட்டிருக்கிற நடிகை நந்திதா தாஸ், சிவப்புப் பட்டுப் புடைவைல, நெத்திச்சுட்டி, பொட்டுனு ரொம்ப இந்தியத்தனமா வந்து எக்ஸ்போர்ட் ஆன மானத்தை இம்போர்ட் பண்ணிட்டாங்க. தாங்க்ஸ் அழகி!

மொபைல் ஜுவல்லரி ஆதிகேசவனின் வொய்ஃப் சாந்தி தந்திருக்கிற பேட்டி படிச்சீங்களா? ஜம் இன் டியர்ஸ்!

"என் ஹஸ்பெண்டு ரொம்ப நல்லவரு. எம்.ஜி.ஆர். ரசிகரு. நிறைய தானம் தருமம் பண்ணுவாரு. ஆனா அவர் என்ன தொழில் செஞ்சாருன்னு எனக்கு எதுவும் தெரியாது. எங்க வீட்டுல இப்ப வெங்காய அடை, வெங்காய வடை எதுவுமே செய்ய முடியலை. வெங்காயம் வெட்டற கத்தியைக் கூட போலீஸ் எடுத்துக்கிட்டுப் போயிடுச்சு"னு 'லைட்' இன்டர்வ்யூ கொடுத்திருக்காங்க. வெங்காயம் உரிக்காமலேயே கண்ணீர் வருது! ●



## ஆசிரியர் பக்கம்

# காப்பி அடிக்க உரிமை கொடுங்கள்!

பரீட்சை விடைத்தாள்களைத் திருட்டுத்தனமாக மாற்றும் அளவுக்கு மாணவர்கள் துணிவது எப்படி? ஆயிரக்கணக்கில் லஞ்சம் கொடுத்துச் செய்த இந்த இழிசெயலுக்கு அவர்களுடைய பெற்றோர்கள் எவ்வாறு துணை நின்றார்கள்? தமிழ்நாட்டின் இரண்டு தலைமுறைகள் முற்றிலும் நேர்மை தொலைத்து, தார்மிக வீழ்ச்சியில் தரைமட்டமாகிவிட்டதையே உணர்த்துகிறது இச்சம்பவம்.

வீழ்ச்சிக்குப் பழியை அரசியலின் தலையில் போடுது மிகவும் சுலபம். அரசியல் தலைவர்களின் லஞ்ச லாவண்யங்கள் பகிரங்கமாக ஆக,



அச்செயல்களுக்கான அதிர்ச்சி மதிப்பு குறைந்து மறைந்துபோகிறது. 'லஞ்சம் - ஊழல் என்பதுதான் நடைமுறை; அவற்றில் ஈடுபடத் தெரியாதவன், துணியாதவன் முட்டாள்' என்கிற சிந்தனைப் போக்கு வேர் கொள்கிறது.

ஆனால், இந்தச் சிந்தனை சத்தியம் அல்ல என்பது குழந்தைகளுக்குக் கூடத் தெரியும். அதனால்தான் அண்ணா பல்கலைக்கழகத்தில் நடந்த அநியாயத்தைப் பற்றி விவரம் கேட்டறிந்த மூன்றாம் வகுப்புச் சிறுவன் பட்டென்று கேட்கிறான்:

"அந்த மாணவர்களோட அப்பா-அம்மா எப்படி இதை அனுமதிச்சாங்க?"

பெரியவர்களானதும், சட்டையைக் கழற்றுகிற மாதிரி சத்தியத்தைக் கழற்றிப் போடுகிறோம். பழியையும் அரசியல்வாதிகள் பேரில் போடுகிறோம்.

சரி, காப்பியடிப்பது, பேப்பர் துரத்துவது போன்றவற்றை எப்படி ஒழிக்கலாம்? பல்கலைக்கழக நிர்வாகம் சீர்திருத்தப்பட வேண்டும் என்று பக்கம் பக்கமாகக் குரல்கள் எழுகின்றன. உண்மைதான். ஆனால் கல்வித் திட்ட சீர்திருத்தம் அதைவிட அவசியம், அவசரம்!

பேசாமல் எல்லா மாணவர்களுக்கும் காப்பி அடிக்க உரிமை கொடுத்துவிடலாம். விடைகளைத் தேடிக் கண்டுபிடித்து எழுத நிறைய அவகாசமும் தந்து, நூலகங்களைத் திறந்து விட்டுவிடலாம். ஆனால், கேள்விகளை மட்டும் வெறும் தகவல் அடிப்படையில் அமைக்காமல், சிந்தனையைத் தூண்டி, படித்தவற்றை அலசி ஆராய்ந்து எழுதும் வகையில் அமைக்கலாம்.

மேலை நாடுகளில் பெரும்பாலும் இந்த முறையில்தான் உயர் கல்வி புகட்டப்படுகிறது; பரீட்சிக்கப்படுகிறது.

இப்படியொரு பாடத் திட்டத்தை அமைத்தால் - பரீட்சை திட்டத்தை வகுத்தால் வெறும் அலங்காரத்துக்காக பி.ஏ. பட்டமும் கித்தாப்புக்காக இன்ஜினீயரிங் பட்டமும் பெற முற்படும் கூட்டம் குறைந்துவிடும். மெய்யார்வம் உள்ளவர்கள் மட்டுமே மேல்படிப்பு படிக்க முற்படுவார்கள்.

காப்பி அடிக்கும் உரிமை இருக்கும்; ஆனால் காப்பியே அடிக்க முடியாது! ○

# கொடூரமான குழந்தை வியாபாரம்!



**வ**ருடம் 1998. புழுங்கி வாட்டும் அக்னி நட்சத்திர காலம். ஸ்ட்ரஹான்ஸ் சாலை குடிசை மாற்று வாரியக் குடியிருப்பு. காற்றைத் தேடி சகலரும் சாலையில் படுக்கையைப் போட்டுவிட்டனர். தந்தை நூருல்லாவின் பக்கத்தில் படுத்திருந்தாள் ஒன்றரை வயது ஃபாத்திமா. 'குல்பி'காரன், டிங், டிங்கென்று பெல்லடித்துப் போவதைப் பார்த்து 'வேணும்.. வேணும்' என்று குழந்தை கைகாட்ட, 'நாளைக்கு வாங்கித் தர்றேன்' என்று அவளைச் சமாதானப்படுத்தி தூங்க வைத்தார் நூருல்லா. உழைத்த களைப்பில் நன்றாகவே உறங்கியும் போனார்.

மறுநாள் காலை கைகளால் குழந்தையை அணைத்துக் கொள்ளலாம் என்று நீட்டினால் பகீர். குழந்தையைக் காணோம். அக்கம்பக்கத்தில் எங்காவது மாறிப் படுத்துக்கொண்டு விட்டதோ என்று அடுத்த அரை மணி நேரம் அலைந்து திரிந்து பார்த்து விட்டார் நூருல்லா. குழந்தையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அலறி அடித்துக்கொண்டு ஓட்டேரி காவல் நிலையத்துக்குச் சென்றார். "ஐயா... நீங்கதான் எப்படியாவது கண்டுபிடித்துத் தரணும்."

குழந்தை ஃபாத்திமா மிஸ்ஸிங் என்ற புகார் ஏற்கப்பட்டு, குற்ற எண் 1321/98 பதிவு செய்யப்பட்டு விசாரணை மேற்கொள்ளப்பட்டது. அடுத்த சில நாட்கள் தொடர்ந்து காவல் நிலையம் சென்றார் நூருல்லா. ஒரு தகவலும் இல்லை. நாளடைவில் குழந்தை காணாமல் போன சோகம் நெஞ்சின் ஒரு மூலையில் நிரந்தரமாகத் தங்கிவிட, சகஜ வாழ்க்கைக்குத் திரும்பினார். குற்ற எண் 1321/98 பற்றிய கோப்பு ஓட்டேரி காவல் நிலையத்தில் நிலுவையிலேயே இருக்க, கொலை, கொள்ளை, அன்றாட சட்டம் ஒழுங்கு பிரச்னைகள் என்று காவல் துறையின் கவனம் சிதற, குழந்தை ஃபாத்திமா, சம்பந்தப்பட்டவர்கள் நினைவில் மறைந்தே போனாள்.

**வ**ருடம் 2005. ஓட்டேரியில் உள்ள ஒரு டாஸ்மாக் கடை. சரக்கு ஏற ஏற,



• தினேஷ்குமார், ரவீந்திரநாத், வத்சலா...

சகட்டு மேனிக்கு உளறிக் கொண்டிருந் தார்கள் 'குடி' மகன்கள்.

"என்னடா சம்பாதிக்கிற? நாற்பது ரூபாய்க்கும் ஐம்பது ரூபாய்க்கும் நாள் பூரா உழைக்கிற. ஒரு குழந்தையைக் கொண்டு கொடுத்தா சொளையா பத்தா யிரம் ரூபாய் தர்றாங்கடா டேய்..." என்று முன கிக் கொண்டிருந்தார் ஒரு குடிமகன்.

"அண்ணாத்தே.. என்ன சொல்ற?" என் றான் பக்கத்தில் இருந்தவன்.

"குழந்தையைக் கொடுத்தா பத்தாயிரம் தெரியுமா? நம்ப சேக் தாவுத்தைக் கேளு எல்லாம் சொல்லுவான்..."

அறைக் கதவருகில் நின்றுகொண்டு 'ஐயா' என்றழைத்தான் அவன். "வாடா.. என்ன விஷயம்?" என்ற அவனை உள் ளுக்கு அழைத்தார் ஓட்டேரி காவல் நிலைய ஆய்வாளர் நவீன் சந்திரன். "நேத்து நைட்டு 'கடை'ல ஒரு பார்ட் டியைப் பார்த்தேனுங்க. குழந்தையைக் கடத்துனா பத்தாயிரம்னு உளறிக்கிட் டிருந்தாங்க" ஆய்வாளருக்குப் பொறி தட்டியது. "டேய் தொடர்ந்து வாட்ச் பண்ணு. அந்த பார்ட்டி மறுபடி வந்தா உடனே சொல்லு."

அடுத்த ஒரு வாரத்தில் டாஸ்மாக் கடையில் உளறிய பார்ட்டி மாட்டிக் கொண்டுவிட்டான். தரமணியைச் சேர்ந்த அவன் பெயர் வரதராஜன். சபீரா, நஸ்ரின் என்று இரு பெண்களை 'மணந் தவன்'. 'முறைப்படி' காவல் துறை விசா ரிக்க உண்மைகளைக் கக்கிவிட்டான் வரதராஜன். குழந்தைகளைக் கடத்திக் கொண்டுபோய், திருவேற்காட்டில் உள்ள மலேஷியன் சமூக சேவை நிறுவனம் என்ற அமைப்புக்குக் கொடுத்து விடுவார் களாம். அந்த நிறுவனம் தத்தெடுக்க விரும்பும் வெளிநாட்டு நபர்களுக்குக் குழந்தை களைக் கொடுத்துவிடு மாம். குழந்தையைத் திருடிக் கொடுத்தவர் களுக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்து விட்டு, தத்தெடுக்கும் ஆட்களிடம் டாலர் கணக் கில் ஏகமாகக் கறந்து விடுமாம் அந்த நிறுவனம். வரதராஜன், சேக் தாவுத், சபீரா, நஸ்ரின் மற்றும் தொண்டு நிறுவன ஊழியர் மனோகரன் ஆகியோரைக் கைது செய்த காவல் துறையின் கவனம், உட னடியாக அந்தத் தொண்டு நிறுவனத்தின் மீது பாய்ந்தது.

ஓட்டேரி காவல் நிலைய ஆய்வாளரை கேட் டுக்கு அருகில் நிற்க வைத்துத்தான் பேசினார்கள் தொண்டு நிறுவன நிர் வாகிகள் ரவீந்திரநாத்தும் அவர் மனைவி வத்சலாவும். கூடவே மகன் தினேஷ் குமார். அவர்கள் பேச்சில் பெரிய போலீஸ் அதிகாரிகள் எங்கள் கைக்குள் என்ற மறைமுக செய்தியும் சொல்லப்பட் டது. "நீங்க தத்துக் கொடுத்த குழந்தை களின் ஆல்பம் மற்றும் ரிகார்டுகளைக் கொஞ்சம் காட்டுங்களேன்." வேண்டா வெறுப்பாக அவற்றைத் தூக்கிப் போட்ட னர். ரிகார்டுகள் 'சரியாகவே' இருக்கின் றன. தொலைந்து போன ஃபாத்திமாவுக்கு அம்மாவாக அந்த ரிகார்டுகளில் காட்டப் பட்டிருந்தார் சபீரா.

அக்கம் பக்கத்து ஸ்டேஷன்களில் குழந்தை மிஸ்ஸிங் கேஸ்களைப் பற்றி விசாரித்தார் ஆய்வாளர். வண்ணாரப் பேட்டையைச் சேர்ந்த மூன்றரை வயது சிறுவன் ஜீபின், 1998ம் வருடம் காணாமல் போனதாக கேஸ் பதிவு செய்யப்பட்டிருந் தது. மறுநாள் ஜீபின் படத்துடன் தொண்டு நிறுவனத்துக்குப் போனார். ஆல்பத்தில் ஜீபினுக்கு அம்மாவாக அதே சபீரா...! "என்ன இது, ஃபாத்திமாவுக்கும், ஜீபினுக் கும் ஒரே அம்மாவா?" நிர்வாகிகள் மீது இடி போல் இறங்கியது ஆய்வாளர் கேள்வி.

"எங்களுக்குத் தெரியாது. குழந்தை யைக் கொடுத்துவிட்டு என் குழந்தைதான் என்று அந்தப் பொம்பளை சொன் னாங்க" சமாளித்துப் பார்த்தனர் நிர்வாகி கள். மோசடியும் தில்லுமுல்லும் பனிச்

செனத் தெரிகையில் எத்தனைதான் பொய் சொல்ல முடியும்? மாட்டிக்கொண்டு விட்டார்கள் நிர்வாகிகள். இப்போது கம்பி எண்ணுகிறார்கள். சென்னை நகர காவல் நிலையங்களில் குறிப்பாக, வட பகுதி காவல் நிலையங்களில் பதிவான மிஸ்ஸிங் கேஸ்கள் தூசி தட்டப்பட்டு, மொத்த வழக்குகளும் ஆணையாளர் அலுவலக குற்றப் பிரிவுக்கு மாற்றப்பட்டுவிட்டன. தினசரி தமிழகம் முழுதுமிருந்து ஏராளமான பெற்றோர்கள், காணாமல் போன தங்கள் குழந்தைகளைப் பற்றிய விவரங்களுடன் அங்கே முற்றுகையிடுகிறார்கள். புகார்களைப் பெற்றுக்கொள்கிறது போலீஸ். "இது ஒரு பெரிய சவால்தான்" என்கிறார் குற்றப் பிரிவு ஆய்வாளர் சிராஜுதின். இதுவரை (மே.12) 35 புகார்கள் பதிவாகியிருக்கின்றன. போகிற போக்கைப் பார்த்தால் விவகாரம் மாநில குற்றப் பிரிவுக்கு மாற்றப்படும் என்று தெரிகிறது.

"எல்லா மட்டத்திலும் விழிப்புணர்வை உண்டாக்கும் இந்த விவகாரம்" என்று சொன்னார் குற்றப்பிரிவு துணை ஆணையர் ராஜேந்திரன். இவர் தலைமையில் சுறுசுறுப்பான டீம் புலன் விசாரணையில் தீவிரமாக இறங்கியிருக்கிறது.

"தமிழ்நாட்டில் 23 தன்னார்வ தொண்டு நிறுவனங்களுக்கு, குழந்தைகளைத் தத்துக் கொடுக்க மத்திய அரசால் அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது. இவற்றில் 14 நிறுவனங்கள் சென்னை சுற்று வட்டாரங்களில் இருக்கின்றன. இதில் இப்போது சர்ச்சையில் சிக்கியுள்ள மலேஷிய தொண்டு நிறுவனமும் ஒன்று. வறுமைச் சூழல் மற்றும் முறை தவறிப் பிறந்த குழந்தைகள் தொண்டு நிறுவனங்களுக்குக் கொடுக்கப்பட்டு, பின்னர் தத்து கொடுக்கப்படுகின்றன. ஒரு குழந்தை பெற்றோரால் தொண்டு நிறுவனத்துக்கு தத்து கொடுக்கப்பட ஒப்படைக்கப்பட்டால், அறுபது நாட்கள் எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளக் கூடாது. காரணம் குழந்தையைக் கொடுத்த பெற்றோர்கள் பாசம் முட்டி மோத மீண்டும் வந்து 'வேண்டாம்... கஷ்டமோ நஷ்டமோ எங்கள் குழந்தை எங்களுடனேயே இருக்கட்டும்' என்று வந்தால் எடுத்துச் செல்லவே அந்த அறுபது நாள் அவகாசம். ஆனால் இந்தத் தொண்டு நிறுவனம் பல விதிமுறைகளை மீறியுள்ளது. எங்கள் விசாரணையில் இதுவரை (மே 12) ஏழு கடத்தப்பட்ட குழந்தைகளை இந்த நிறுவனம் வாங்கி நெதர்லாந்து, ஆஸ்திரேலியா என தத்து கொடுத்திருப்பதாகத் தெரிய வந்திருக்கிறது. தொடர்ந்து விசாரணையில் ஈடுபட்டு வருகிறோம். மேலும் பல அதிர்ச்சியூட்டும் தகவல்கள் வெளியாகும் வாய்ப்பிருக்கிறது" என்று சொல்கிறார் துணை ஆணையர் ராஜேந்திரன்.



• கைதான கடத்தல் கும்பல்

இந்தத் தொண்டு நிறுவனம் தர்ம நியாயங்களுக்கும் சட்டதிட்டத்துக்கும் உட்பட்டு செயல்பட்டு வருவதாக பல பெரிய போலீஸ் அதிகாரிகள் நம்பியிருந்தனர். ஒரு டி.ஜி.பி. அந்தஸ்து அதிகாரி, தமக்குத் தெரிந்த வெளியூர் நண்பருக்கு இங்கிருந்து குழந்தையைத் தத்தெடுக்க உதவியிருக்கிறார். 'அந்தக் குழந்தை கடத்தப்பட்ட குழந்தையாக இருக்குமோ' என்று பதற்றமடைந்துவிட்டார் தற்போது.

"கடத்தப்பட்டு வெளிநாட்டில் வாழும் குழந்தைகளை மீண்டும் இந்தியாவுக்குக் கொண்டு வருவதில் சட்டரீதியாகப் பல சவால்கள் காத்திருக்கின்றன. இதுதவிர உளரீதியான பல பிரச்னைகளும் உள்ளன. எல்லாவற்றையும் சமாளித்து நீதியை நிலைநாட்டுவோம்" என்றார் ஓர் உயரதிகாரி.

**- ப்ரியன்**

# ஐஸ்வர்யா ராய்க்கு அவசர எஸ்.எம்.எஸ்!

பெல்காமிலிருந்து தமிழ் சினிமாவுக்கு இறக்குமதியாகியிருக்கும் லட்சுமி ராய், 'கற்க கசடற' படத்தில் தமிழ் ரசிகர்களை "அடேங்கப்பா!" சொல்ல வைத்திருக்கும் அழகுப்புயல்.

நீங்க ஐஸ்வர்யா ராய்க்கு உறவாமே? என்றால்,

"யார் இந்தப் புரளியைக் கிளப்பி விட்டது? அவங்களும் பெல்காம். நானும் பெல்காம். அவங்களும் ராய் ஃபேமிலி. நானும் ராய் ஃபேமிலி. அவங்களும் நடிகை நானும் நடிகை. தட்ஸ் ஆல்" எனக் கண்களை மலர்த்தியபடி பேசுகிறார். இவரின் தந்தை பெல்காமில் பிராந்திக் கடை முதலாளி.

''மொத்தம் மூன்று பெண்கள். மூத்தவர் ரேஷ்மா. அடுத்து அஸ்வினி. கடைக்குட்டி நான். அப்பா ஆசையா பையனை எதிர்பார்த்து எதிர்பார்த்து, நான் பிறந்தேனாம். அதனால் மற்ற இரண்டு பேரையும்விட, எனக்கு செல்லம் ஜாஸ்தி. பையன்ங்கிற நினைப்பிலேயே என்னை 'கிருஷ்ணா'ன்னு தான் அப்பா கூப்பிடுவார். ரொம்ப சேட்டையாகவே வளர்ந்துட்டேன்'' என்று சொல்லிக்கொண்டே கையிலிருந்த காஸ்ட்லி செல்போனை காற்றில் ஸ்டைலாகச் சுழற்றிவிட்டுப் பிடித்தார். இந்தத் துடுக்குத்தனம்தான் இவரை சினிமாவுக்கு இழுத்து வந்ததா?

''எட்டாவது படிக்கும்போதே விளம்பர உலகம் என்னை விட்டு வைக்கல. 'நீ ரொம்ப அழகு, மாடலிங் பண்ணு'ன்னு வீடு தேடி வந்துட்டாங்க. அப்புறம் 2003, 2004 இரண்டு வருடம் 'மிஸ் பெல்காம்' பட்டத்தைச் சூடி அழகு பார்த்தாச்சு. நடிகையாகி இப்போ உங்க முன்னாடி நிற்கிறேன்'' என்றவரிடம், ''பெண்கள் இன்னிக்கு தைரியமாகச் சினிமாவுக்கு வரலாமா? நீங்க உத்திரவாதம் தருவீங்களா?''என்றோம்.

"ம்..ம்..ம்... வரலாம். அழகும் ஆர்வமும் இருக்கிற பெண்கள் மத்தியில் அந்த பயம் வர நிறைய காரணம் இருக்கு. வீட்டில் முதலில் அனுமதிக்கணும். அனுமதி கிடைத்தாலும் பெற்றோர் துணையா நிக்கணும். இங்கே நமக்கு ரொம்ப நல்லவங்க தேவைப்படறாங்க. அது அமைந்துவிட்டால் சினிமா மாதிரி சிறந்த இடம் வேறெதுவும் இல்லை''எனும்




லட்சுமி ராய்க்கு ஹிந்தியில் பிடித்த ஹீரோ விவேக் ஒபராய்... ஐஸ்வர்யா ராய் செல் நம்பர் வச்சிருக்கிறவங்க அவசரமா ஒரு எஸ்.எம்.எஸ். தட்டிவிடுங்க ப்ளீஸ்!

- ஸ்ரீசக்கரம்







## கட்சிக் கறைகள்; ஜாதிச் சாயங்கள்!

தேர்தல் கமிஷன் செய்ததாகக் கூறப்படும் அநீதியை, லல்லு பிரசாத் யாதவ் தோண்டியெடுத்துச் செய்தியாக்கியிருக்கிறார். பீஹாரில் நாடாளுமன்றத் தேர்தல் நடந்தபோது நடைபெற்றதாகச் சொல்லப்படும் முறைகேடு! இந்தக் குற்றச்சாட்டை லல்லுபிரசாத் எழுப்புவதுதான் மிகவும் நகைப்புக்குரிய விஷயம்!

பல்லாயிரம் கோடி ரூபாய் மாட்டுத் தீவன ஊழல் குற்றசாட்டுக்கு விசாரணையைச் சந்தித்து வருகிறார் லல்லு. அதன் விளைவாக, அவர் பீஹார் முதல்வர் பதவியிலிருந்து விலக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டபோது, தமது பினாமியாக, தமது மனைவியை அப்பொறுப்பில் அமர்த்தி, ரிமோட் கண்ட்ரோலில் ராஜ்ஜியம் நடத்தியவர்! அவ்வாட்சியின்போது பீஹாரின் சட்டம் - ஒழுங்கு பிரச்னை மேலும் மோசமாக அனுமதிக்கப்பட்டதேயொழிய, கொஞ்சமேனும் சரிசெய்யப்படவில்லை. இப்படிப்பட்ட ஒரு சூழலில், பொதுத் தேர்தலை நடத்துவது என்பது சாமானியமான விஷயம் அல்ல. தேர்தல் கமிஷனின் பொறுப்பு அபரிமிதமானதாயிருந்தது. அங்கே அரசியல் அராஜகம் கோலோச்சியது.

தேர்தல் கமிஷனால் நியமிக்கப்பட்ட சிறப்புப் பார்வையாளர் எல்.வி.சப்தரிஷி, 'லல்லு போட்டியிட்ட தொகுதியில் தேர்தலை ரத்து செய்து ஒத்திவைக்க அவசியம் இல்லை' என்று தெரிவித்ததாகவும், அக் கருத்தை மீறி தேர்தல் கமிஷன் இயங்கி சாப்ரா தொகுதியில் மறுதேர்தலுக்கு உத்தரவிட்டதாகவும், பா.ஜ.கவின் தூண்டுதலின் பேரிலேயே இவ்வாறு தேர்தல் கமிஷன் நடந்து கொண்டதாகவும்




# கல்கி



2005 மே 22
பார்த்திப வைகாசி 8
மலர் : 63
இதழ் : 43


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




லல்லுபிரசாத் யாதவ் சொல்கிறார். அது மட்டுமல்ல; தேர்தல் முடிந்து ஓராண்டுக்குப் பிறகு - தற்போது தேர்தல் கமிஷன் அன்று ஜாதி உணர்வுடன் செயல்பட்டதாகவும்; யாதவ ஜாதியினரைச் சிறுமைப்படுத்தியதாகவும், சப்தரிஷி சட்ட அமைச்சருக்குப் புகார்க் கடிதம் எழுதியிருக்கிறார். சட்ட அமைச்சருக்குப் போய்ச் சேர்வதற்கு முன் அக்கடிதம், தேர்தல் கமிஷனின் நடவடிக்கையால் பாதிக்கப்பட்ட ரயில்வே அமைச்சர் கைக்குக் கிடைத்திருக்கிறது! அதை அவர் மீடியாவுக்கும் கொடுத்திருக்கிறார்.

தேர்தல் கமிஷன் என்பது சுயாட்சி பெற்ற அமைப்பு. ஒரு தொகுதியில் மறு தேர்தல் அல்லது தேர்தல் ஒத்திவைப்பது குறித்து முடிவெடுக்கும் அதிகாரம் கமிஷனுக்குத்தான் உண்டு. அந்த முடிவை யாரும் கேள்விக்கு உட்படுத்த முடியாது. தேர்தல் கமிஷன் நியமிக்கிற சிறப்புப் பார்வையாளர், தொகுதி நிலவரம் குறித்து என்ன அறிக்கை அளித்தாலும், இறுதி முடிவு கமிஷனுடையதுதான். அந்த முடிவையும், சிறப்புப் பார்வையாளரின் கருத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு எடுத்து விடுவதில்லை.... வேறு பல அம்சங்களையும், தகவல்களையும் தேர்தல் கமிஷன் கருத்தில் கொள்ளக்கூடும்.

இப்படியிருக்க, லல்லு பிரசாத் யாதவ் தேர்தல் கமிஷனுக்கு இழுக்கு செய்யும் வகையில் சாப்ரா மறுதேர்தல் விவகாரத்தைத் தோண்டியெடுத்திருப்பது அவலமான காரியம். அதிலும் மறுதேர்தலில் அவர் வெற்றிபெற்ற பிறகு, இந்த விஷயத்தைக் கிளறியிருப்பது இன்னும் கேவலம்.

ரயில்வே அமைச்சர் என்ற முறையில், அடிக்கடி நடந்து வரும் ரயில் விபத்துகளுக்கு அவர் பொறுப்பேற்க வேண்டியவராகிறார். அத்துடன் தமது பேரிலுள்ள வழக்கு, குற்றச்சாட்டுகள் பேரிலிருந்தும் மக்கள் கவனத்தை திசை திருப்பவே இவ்வாறு அவர் செயல்படுகிறார் என்று கருத இடமிருக்கிறது.

"அப்படியானால், சப்தரிஷி என்ற ஐ.ஏ.எஸ். அதிகாரியின் நேர்மையும் சந்தேகத்துக்குள்ளாகிறதே... அவர் நேர்மைக்குப் பெயர் பெற்றவராயிற்றே?" என்ற கேள்வி எழுகிறது. அதே நேரத்தில் பின் வரும் கேள்விகளும் எழுகின்றன:

தேர்தல் முடிந்து இத்தனை மாத காலம் பேசாமலிருந்த சப்தரிஷி, இப்போது ஏன் சட்ட




அமைச்சருக்கு கடிதம் எழுத வேண்டும்? அவர் அனுப்பியதாகச் சொல்லப்படும் கடிதம், சட்ட அமைச்சரைச் சென்றடையும் முன்னரே லல்லுபிரசாத் யாதவிடம் எவ்வாறு போயிற்று? தேர்தல் கமிஷனின் பிரதிநிதியாகச் செயல்படும் சப்தரிஷியின் நடுநிலை எங்கே போயிற்று! தேர்தல் கமிஷன், லல்லுவுக்கு எதிராகச் செயல்பட்டது என்று சப்தரிஷி குற்றம் சாட்டும்போதே, அவர் லல்லுவுக்கு ஆதரவாக இயங்கியிருக்கிறார் என்ற குற்றச்சாட்டுக்கும் உள்ளாகலாமல்லவா!

இந்தக் கேள்விகளுக்குச் சரியான பதில் இல்லாததனால், தேர்தல் கமிஷன் பேரில் சப்தரிஷி சாட்டும் ஜாதி வெறி குற்றச்சாட்டும் வலுவிழந்து போகிறது.

லல்லு மூலம் வெளியிடப்பட்ட சப்தரிஷியின் குற்றச்சாட்டுகளுக்கு நல்ல வேளையாக தேர்தல் கமிஷன் நேரடியாகப் பதில் சொல்லாமல், குடியரசுத் தலைவரிடம் சென்று விளக்கம் அளித்துள்ளது.

லல்லுபிரசாத் யாதவின் தான்தோன்றித்தனத்தால் பலவித சங்கடங்களுக்கு உள்ளாகி வரும் இன்றைய மத்திய அரசும் இந்த விவகாரத்தில் அவசரப்பட்டு அறிக்கை விடாமல், நின்று, நிதானித்து இயங்கியிருக்கிறது.

தேர்தல் கமிஷனின் சுயேட்சை அதிகாரங்களை உறுதி செய்யும் வகையில் பிரதமர் வெளியிட்டுள்ள அறிக்கை, நடுநிலையுடன் அமைந்திருக்கிறது. லல்லுவின் குற்றச்சாட்டு களையும் சப்தரிஷியின் குற்றச்சாட்டுகளையும் ஒதுக்கிவிட்டுப் பிரதமர் சொல்கிறார்:

"இது நாள் வரை கட்சி அரசியல் கறைகளும் ஜாதி அரசியல் சாயங்களும் படியாமல் தனித்து, கௌரவமாக இயங்கி வரும் தேர்தல் கமிஷனை, தொடர்ந்து அதேபோல் இயங்க அனுமதிக்க வேண்டும்."

கட்சி அரசியல் என்பது ஜாதி அரசியலாக மட்டுமின்றி, குண்டாந்தடி அரசியலாகவும் மாறிவிட்ட நிலையில் தேர்தல் கமிஷனின் பொறுப்பு, அதிகாரங்கள் குறித்து பிரதமர் வெளியிட்டுள்ள அறிக்கை அக்ஷர லட்சம் பெறும். ○

# பேச்சுலர் சமையல்



"ரெசிபி சொல்லணுமா... டிப்ஸ் சொல்லணுமா... இல்ல... ஏதாவது ஒரு டிஷ் செய்து காட்டட்டுமா..." என்று மிகுந்த குஷியுடன் பேசுகிறார் வல்லிக்கண்ணன். தமது அற்புதமான எழுத்துக்களால் வாசகர்களுக்கு விருந்தளிக்கும் இந்த எண்பத்தைந்து வயது பேச்சிலருக்குள் 'ஒரு தேர்ந்த சமையல் கலைஞர் பொதிந்து கிடக்கிறார்' என்பதை அவரிடம் பேசியபோதுதான் உணர முடிந்தது.

"முதல்ல நானும், அண்ணனும் சின்னதா ரூம் எடுத்துத் தங்கியிருந்தோம். ரெண்டு பேரும் மூணுவேளையும் ஹோட்டல்ல சாப்பிடறது தான் வழக்கம். ஒரு மிஷின் மாதிரி போறது, சாப்பிட்டுட்டு வர்றது எங்களுக்குப் பிடிக்கல. அதுமட்டுமில்லாம காசும் ஏகத்துக்கும் செலவாச்சு. அண்ணன் ஆஃபீஸ் போயிடுவாரு. நான் வீட்லதான் இருந்தேன். அதனால நானே சமைக்கலாம்னு முடிவு பண்ணிட்டேன். சமைக்கறதுக்கு எங்கம்மா சமையல் பண்ணினதை கிட்டயிருந்து கவனிச்சது ரொம்ப யூஸ் ஆச்சு" என்றவர், சற்றே நிதானிக்கிறார்.

"இப்போ இருக்கற மாதிரி அப்போ கியாஸ் ஸ்டவ், குக்கர்லாம் கிடையாது. எங்க ரூம்ல கரி அடுப்புதான். நான் சமைக்கப் பழகினது முழுக்கக் கரி அடுப்புலதான். என்ன, சமையல் கொஞ்சம் லேட்டாகும். நான் சமையலுக்குப் புதுசுங்கறதால, எது பண்ணினாலும் எங்க அண்ணன் 'சூப்பரா இருக்கு'ன்னு தான் சொல்வாங்க. அதுவே எனக்கு பூஸ்ட் மாதிரி. சித்திரமும் கைப்பழக்கம்ங்கற மாதிரி தொடர்ந்து சமையல் செய்யவே, நல்லா சமைக்க வந்துடுச்சி..." என்று மூச்சுவிடாமல் சொல்லிக் கொண்டிருந்தவரிடம், "எதுல நீங்க ஸ்பெஷலிஸ்ட்?" என்றதற்கு,



* பூம்பருப்பு சுண்டல்

"குறிப்பிட்டு ஒரு டிஷ்ஷை சொல்ல முடியாது. ஆனா எனக்கு செய்யத் தெரிஞ்சதுல எதைச் செய்தாலும் அதை 'தி பெஸ்டா' செய்துடுவேன். அது கோதுமை தோசை, சேமியா உப்புமா மாதிரி டிபன் ஐட்டமா இருந்தாலும் சரி. சாம்பார், மோர்க் குழம்பு மாதிரி லன்ச் ஐட்டமா இருந்தாலும் சரி. என்ன ஒண்ணு, எனக்கு மாவு அரைச்சி இட்லி சுடத் தெரியாது. அதேபோல கூட்டு, அவியல் செய்யத் தெரியாது" என்றார்.

"உங்க சமையல் வாழ்க்கையில் வித்தியாசமான அனுபவம் ஏதாவது இருக்கிறதா..."

— வல்லிக்கண்ணன்



# ருசி, ரசி, புசி!

"இருக்கே... ஒரு தடவை சர்க்கரைப் பொங்கல் செய்து சாப்பிடலாம்னு நினைச்சேன். அரிசி குழையுற வரைக்கும் வேக வைக்கணும் இல்லியா. அதனால அரிசியை ரொம்ப நேரத்துக்கு வேக வச்சிட்டேன். எடுத்துப் பார்த்தா பொங்கல் அடி புடிச்சிடிச்சி. கரண்டியால எடுக்க வேண்டிய சர்க்கரைப் பொங்கலை தோசை திருப்பியால கரண்டி எடுக்கறாப்ல ஆயிடிச்சி. அதை சாப்பிட்ட என் பக்கத்து வீட்ல இருந்தவங்க 'ரொம்ப நல்லா இருக்கு சார்'னு பாராட்டினதுதான் இதுல தமாஷ்" சிலாகித்துச் சிரித்தார் வல்லிக்கண்ணன்.

"பூம்பருப்புன்னு ஒரு சுண்டல் அடிக்கடி செய்து சாப்பிடுவேன்... அதையே இந்த ஊர்ல கடலைப் பருப்பு சுண்டல்னு சொல்வாங்க. ரொம்ப ஈஸியா, சீக்கிரமா செய்துடலாம். ஒரு கப் கடலை பருப்பை, தண்ணில ஒரு மணி நேரம் ஊற வச்சி எடுத்துக்கணும். அப்புறம் உப்புப் போட்டு அதை வேக வச்சி, எடுத்து தனியா வச்சிடணும். இப்போ எண்ணெய் சட்டியில கொஞ்சம் எண்ணெய் விட்டு, அதுல கடுகு ஒரு டீஸ்பூன், ரெண்டு வர மிளகாய், கொஞ்சம் பெருங்காயத் தூள், கறிவேப்பிலை நாலுத்தையும் போட்டு நல்லா வதக்கணும். இப்போ துருவின தேங்காயை சட்டியில போட்டு, கொஞ்ச நேரம் வதக்கிட்டு, வேக வச்ச பருப்பையும் எண்ணெய் சட்டியில போட்டு வதக்கினா பூம்பருப்பு ரெடி. ரொம்ப ருசியா இருக்கும்" என்றார்.

"சமையல் பண்ணின பாத்திரங்களை கழுவுறது இருக்கு பாருங்க, அப்பப்பா.. அதைப்போல கஷ்டம் வேற எதுவும் எனக்கு இல்ல" என்று சிரிக்கும் இந்த சீனியர் பேச்சிலர்,

"பேச்சிலர்னா ஏதோ பசிக்குச் சாப்பிடணும். வெந்ததைச் சாப்பிடணும்னு இருக்கக் கூடாது. எதைச் செய்து சாப்பிட்டாலும் ரசிச்சு, ருசிச்சு, பசிச்சு சாப்பிடணும். அப்போதான் சாப்பாடு உடம்புல ஒட்டும்" என்று டிப்ஸ் தந்து நம்மை வழியனுப்பி வைத்தார்.

- இரா.முத்துக்குமார்

படங்கள் : ஸ்ரீஹரி



# பரவசப்படுத்திய பாதபூஜை!



அனுஷா - ஷ்யாமா கல்யாணி

**வி**ஷ்ராந்தி முதியோர் இல்லம். அன்னையர் தினத்திற்கு மறுநாள், தீபாவளி, பொங்கலையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டுவிடும் அளவுக்கு உற்சாகம் அங்கே கரைபுரண்டு ஓடிக் கொண்டிருந்தது. பரபரப்பும் சந்தோஷமும் கலந்தபடி வளைய வந்து கொண்டிருந்தனர் நாம் பார்த்த அத்தனை முதியோரும்.

''அன்னையர் தினத்தைக் கொண்டாடற விதமா இங்கே இருக்கிற வயசான பெண்மணிகளுக்குப் பாத பூஜை பண்ண ஏற்பாடு பண்ணியிருக்கோம். அதான் இத்தனை மகிழ்ச்சி. பாத பூஜை ஒரு மனுஷனுக்குத் தரப்படற அதிகபட்ச மரியாதை. இதை இங்க இருக்கற ஆதரவற்ற, வயதான பெண்களுக்குத் தர்றப்போ அவங்க மனசு சந்தோஷமடையும், பெருமையடையும்கறது எங்க எண்ணம். தான் பெற்ற பிள்ளைங்க தராத மரியாதையை, யாரோ பெற்ற பிள்ளைங்க தர்றப்போ, அது அவங்களை இனம்புரியாத சந்தோஷத்துக்கு ஆளாக்கும். அதன்மூலமா மிகுந்த மனநிறைவோட பாதபூஜை பண்ணினவங்களுக்கு ஆசீர்வாதம் செய்வாங்க. இதனால பலருக்கும் மனநிம்மதி கிடைக்கும்'' என்று பூரிப்புடன் பேசிய விஷ்ராந்தி இல்லத் தலைவி சாவித்ரி வைத்தி,

''எல்லா தாய்மாரும் விடியற் காலையிலேயே எழுந்து குளிச்சிட்டு, புது டிரஸ் போட்டுக்கிட்டு, முகம் முழுக்கப் பூரிப்போடு வந்து ஹால்ல வரிசையா உட்கார்ந்துட்டாங்க. இந்தப் பாதபூஜைக்குத் தங்களோட பிள்ளைகள் வர்றதுக்கு சான்ஸ் இருக்குன்னு அவங்க மனசுக்குள்ள இருக்கற எதிர்ப்பார்ப்பு, கண்கள்ல பளிச்சுன்னு தெரிஞ்சது நெகிழ்ச்சியான விஷயம்'' என்றார்.

பாதபூஜை செய்து கொண்டவர்களுள் ஒருவரான எழுபத்திரண்டு வயது விசாலாட்சி பாட்டி நம்மிடம் பேசும்போது,

"என் காலைத்தொட்டு கழுவினப்போ முதல்ல என் ஞாபகத்துக்கு வந்தது என்



* பாத பூஜை...

வாங்க. அப்படியே இறந்தும் போயிட்டாங்க. நான் சின்னப் பொண்ணா இருந்ததால அதை அப்ப என்னால எதிர்க்க முடியல. அதுமாதிரி இன்னமும் நிறைய பேருக்கு ஆகுது. இப்படிச் செய்யறதுனால யாவது எங்க பாட்டியோட ஆத்மா சாந்தியடைஞ்சா அதுவே எனக்குப் போதும்" என்றார்.

இந்நிகழ்ச்சியில் நம்மை வியக்க வைத்த மற்றொரு விஷயம், பெரியவர்களோடு சேர்ந்து சில சிறுமிகளும் முதியோருக்குப் பாதபூஜை செய்ததுதான். எந்தவித அருவருப்புமின்றி பாட்டிகளின் கால்களுக்குப் பாத பூஜை செய்து, பரவசத்தோடு நின்றிருந்த சிறுமிகளான அனுஷா, ஷ்யாம் கல்யாணியை அணுக,

"'நம்ம பாட்டிங்களுக்கு நாம எல்லாரும் இருக்கோம். ஆனா இந்த முதியோர் இல்லத்து பாட்டிங்களுக்கு யாருமே இல்லை. அவங்களுக்குப் பாத பூஜை பண்ணினா ரொம்ப புண்ணியம்'னு எங்க அம்மா சொன்னாங்க. அதனாலதான் நாங்க பாதபூஜை செஞ்சோம்" என்றனர் இருவரும் கோரசாக.

எந்த முதியோரின் பிள்ளைகளாவது பாதபூஜை செய்ய வந்தார்களா என்று நாம் விசாரித்தபோது, கவலை தோய்ந்த முகத்துடன் எல்லா வயதான உதடுகளும் இல்லை என்றே பிதுக்கின.

- கலை



* உமாஷங்கரி



* விசாலாட்சி

கல்யாணத்தப்போ நான், என் அம்மா - அப்பாவுக்குப் பாதபூஜை பண்ணினது தான். அடுத்து என் பசங்க, அவங்க கல்யாணத்தப்போ எனக்குப் பாதபூஜை பண்ணினது ஞாபகத்துக்கு வந்தது. பிள்ளைங்க ஒதுங்கிட்ட பிறகு, யாரோ ஒருத்தங்க எங்க மேல அன்பு காட்டி இந்தப் பாதபூஜைக்காக என் காலைத் தொட்டப்போ, உடம்பெல்லாம் சிலிர்த்து, என்னையும் மீறி கண்ணு கலங்கிடிச்சி... மனசை கட்டுப்படுத்திக்கிட்டு, பிள்ளை குட்டிகளோட நிம்மதியா வாழணும்னு ஆண்டவனை வேண்டிக்கிட்டேன். என்ன ஒரு வருத்தம், என் பசங்க வருவாங்கன்னு எதிர்பார்த்தேன்... வரல, அதனால பரவாயில்ல... ஏதாவது அவசர வேலை இருந்திருக்கும்" என்றார் விரக்தியாக.

இல்லத்திலிருந்த 125 பேருக்கும் பாத பூஜை செய்ய ஏராளமானோர் மிகுந்த ஆர்வத்துடன் வந்திருந்தினர்.

மூதாட்டி ஒருவருக்குப் பாதபூஜை செய்த உமாஷங்கரி என்பவரிடம் பேச்சுக் கொடுத்தபோது, "இங்க இருக்கிறவங்க யாரும் என் சொந்தக்காரங்க இல்லை. ஆனா, இந்தப் பெரியவங்களுக்கு பாத பூஜை பண்ணி மரியாதை செய்ய நான் வந்ததுக்குக் காரணம் என் பாட்டிதான். பெரிய பிள்ளை வீட்ல ஒரு மாசம், சின்ன பிள்ளை வீட்ல ஒரு மாசம்னு அலை

"இன்று பிற்பகல் மூன்று மணிக்கு ரிவைஸிங் கமிட்டி உறுப்பினர் ஒருவர் உங்க படத்தைப் பார்க்க இருக்கிறார்'' என்றது தொலைபேசி தகவல்.

இருப்பதோ மூன்று பேர். மூவருக்கும் வர முடியாத நிலை என்பது எனக்குத் தெரியும். அப்படியிருக்க யார் வந்து பார்க்கப் போகிறார்?

'நான் இன்றைக்கு ஏவி.எம்மின் படத்தைப் பார்த்து விடுகிறேன்' என்று நாகிரெட்டியார் அவர்களே போன் செய்து சொன்னதாகக் கேள்விப்பட்டபோது, நான் ஆடிப்போனேன்.

மகன் இறந்த துக்கம் அப்படியே இருக்கும் நிலையில் யார் அவரைக் கட்டாயப்படுத்தியது என்று பல முனைகளிலும் விசாரித்தேன். அவரே தான் விருப்பப்பட்டு வருவதாகத் தெரிந்ததும், நான் அப்படியே நெகிழ்ந்து போய் விட்டேன்.

'ப்ரிவ்யூ பேரடைஸ்' தியேட்டரில் நான் சென்று அவருக்காகக் காத்திருந்தேன்.

நாகிரெட்டியார் வந்ததும் நான் அருகில் ஓடிப்போய் 'பிரசாத் அண்ணா...' என்று தொடங்கியதும் சைகையால் என்னை அடக்கினார்.

படம் பார்த்தார். 'ஏ' சர்டிபிகேட் கொடுத்து படத்தை ஓ.கே. செய்தார். வெளியே வந்தும் நான் கொஞ்சம் கூட எதிர்பாராத விதமாக என் தோள் மீது கை போட்டுக்கொண்டு 'பிரசாத் அண்ணா எப்படி எனக்கொரு பிள்ளையோ, அப்படி நீயும் எனக்கொரு பிள்ளைதான்' என்று அவர் சொன்னதும் நான் அழுதே விட்டேன்.

"அவன் போயிட்டான். திரும்பி வரப் போறதில்ல. உனக்கு படம் ரிலீஸாக வேண்டிய அவசரம் பற்றி கேள்விப்பட்டேன். நீ சங்கடப்படக் கூடாது என்பதற்காக நானே இன்று படம் பார்க்க விருப்பம் தெரிவித்

• 'புன்னமிநாகு' படத்தில்...



# அந்த நாள் ஞாபகம்



• நாகிரெட்டி



• எஸ்.எஸ்.வாசன்

## ஏவி.எம்.சரவணன்




தேன். படத்துக்கு 'ஏ' கொடுத்திருக்கேன். ஆனா படம் நல்லா ஓடும்பா. கவலைப் படாதே'' என்று என்னைத் தட்டிக் கொடுத்துவிட்டு கிளம்பினார்.

ரெட்டியாரை நினைக்கும்போதெல்லாம் ஒரு சம்பவம் எனக்கு நினைவுக்கு வராமல் போகாது.

# "ரெட்டியார் இலை எடுக்கிறார்!"

என் மூத்த சகோதரர் முருகனின் திருமணம். அதே சமயம் என் சகோதரி மீனாவுக்கும் திருமணம் . இரண்டு திருமணங்களின் ஏற்பாடுகளும் தடபுடலாகச் செய்யப்பட்டிருந்தன. திருமணத்தன்று ஏகக் கூட்டம். பகல் விருந்துக்கு மிகக் கவனமாகத் திட்டங்கள் போட்டிருந்தும் கூட்டத்தைச் சமாளிக்க முடியாமல் முதல் பந்தியில் சாப்பிட்டவர்கள் எழுந்து சென்ற பின் இலை எடுத்து அடுத்த பந்தி இலை போடுவதற்குள் மக்கள் நாற்காலிகளில் உட்கார்ந்து விட்டார்கள். நேரமாகிக் கொண்டிருந்தது. இலை எடுக்கும் ஊழியர்களிடம் எதிர்பார்த்த வேகம் இல்லை. பார்த்தார் நாகிரெட்டியார். வேட்டியை மடித்துக் கட்டி எச்சில் இலைகளை எடுக்கத் தொடங்கிவிட்டார். 'ரெட்டியார் இலை எடுக்கிறார்' என்ற தகவல் போனதும் அப்பச்சி ஓடி வந்து 'என்ன இது... என்ன இது' என்று ரெட்டியாரை அப்படியே கட்டிக் கொண்டார்.

'இதில் என்ன இருக்கு? என் வீட்டுக் கல்யாணத்தில் ஒரு அவசரம்னா நான் செய்ய மாட்டேனா? இதுவும் எங்க வீட்டுக் கல்யாணம் போலத்தானே...' என்றார் ரெட்டியார்.

அதே போல அறிஞர் அண்ணா



# வாசகர் யோசனை!

**ச**மீபத்தில் நான் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தேன். அப்போது ஒரு இளைஞர் தனது ஒரு வயதுக் குழந்தையை இடது கையில் தூக்கி வைத்துக் கொண்டு, வலது கையால் தம் அடித்துக் கொண்டிருந்தார்.

அவர் வெளியில் விடும் புகை முழுவதும், அப்படியே அந்தக் குழந்தையின் முகத்தில் பட்டது. அது குழந்தை என்பதால், எதிர்ப்பு தெரிவிக்கத் தெரியவில்லை. வேறு வழியின்றி அந்த குழந்தையும் சிகரெட் புகையை சுவாசிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அது அவரது குழந்தை என்பதால், அதனைப் பார்த்துக் கொண்டிருந்த என்னால் ஒன்றும் செய்ய இயலவில்லை.

தம் அடிக்கும் புண்ணியவான்களே! அட்லீஸ்ட் கைக்குழந்தையை கையில் வைத்திருக்கும்போதாவது தம் அடிப்பதை நிறுத்தித் தொலையுங்களேன்...

- பனிமலர்,
மதுரை

அவர்கள் முதலமைச்சராக இருந்தபோது நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில், அலங்கார வண்டிகளின் அணிவகுப்புக்குப் பொறுப்பேற்றிருந்த எஸ்.எஸ்.வாசன், நாகிரெட்டியார், அப்பச்சி மூவரும் முதல் நாள் நள்ளிரவு ஒத்திகை பார்க்க, அன்றைய மவுண்ட்ரோடில் இன்றைய ராஜி பில்டிங் எதிரில் பிளாட்பாரத்திலேயே உட்கார்ந்திருந்தபோது, நாகிரெட்டியார் சிரித்தாராம். அருகிலிருந்த ஏ.எல். சீனிவாசன் 'ஏன் சிரித்தீர்கள்?' என்று கேட்டதற்கு, 'இல்ல... நாம பிளாட்பாரத்தில் இருந்துதான் முன்னுக்கு வந்து இந்த நிலைமையில இருக்கோம். இப்ப மறுபடியும் பிளாட்பாரத்தில் வந்து உட்கார்ந்திருக்கிறோமேன்னு நினைச்சேன். சிரிப்பு வந்தது" என்று விளக்கமளித்தாராம்.

ரெட்டியாரைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் என் நினைவுக்கு வரத் தவறுவதேயில்லை. அன்று எங்கள் படத்தை, தனது துக்கத்திலும் வந்து பார்த்தபோதும் இந்த நிகழ்ச்சிகளின் நினைவுகள் என்னுள் வந்து மோதின. என் பெருமைக்குரிய பெருமகன் அவர்.

**நா**கிரெட்டியார் சொன்ன மாதிரியே 'புன்னமிநாகு' என்ற அந்தப் படம் வெற்றிகரமாக ஓடியது. நூறு நாட்கள் கண்டு வெற்றிவிழா கொண்டாடியது. நூறாவது நாள் விழாவிற்குத் தலைமையேற்று நடத்தித்தர வேண்டும் என்று நான் ரெட்டியாரைக் கேட்டுக் கொண்டேன்.

"இல்லை சரவணன். பிரசாத் போய் ஒரு வருஷம் வரைக்கும் நான் வெளி நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதாக இல்லை" என்றார்.

"அன்று என்னிடம் நீங்கள் 'நீயும் எனக்கொரு பிள்ளைதான்' என்று சொன்னீர்கள். அந்த உரிமையில் கேட்கிறேன். இந்த விழாவுக்குத் தாங்கள் வந்து சிறப்பிக்க வேண்டும்" என்றேன் உரிமையுடன்.

"ஒரு வருஷம் வெளியே போகக்கூடாதுன்னு முடிவெடுத்திருந்தேன். ஆனா நீ கேக்கறே. உனக்காக நான் வர்றேன். ஆனா ஒரு மணி நேரம்தான் நான் அங்கே இருப்பேன். அதுக்கு மேல என்னைக் கட்டாயப்படுத்தாதே."

அதேபோல நாகிரெட்டியார் வந்திருந்து விழாவைச் சிறப்பித்துக் கொடுத்தார்.

இப்படிப்பட்ட இனிமையான அனுபவங்கள் ஒருபுறம் எனக்குக் கிடைத்துக் கொண்டிருக்க, கசப்பான அனுபவங்களுக்கும் பஞ்சமில்லை.

எங்கள் வடபழனி பிரஸ்ஸில் இருந்த சில மெஷின்களை விற்றுவிட்டு புதிதாக சிலவற்றை வாங்க வேண்டும் என்று விரும்பினோம். சில மெஷின்களை விற்றோம். அதில் 'மெஷின் நம்பர் ஃபைவ்' என்ற மெஷினை சிவகாசியில் 'குரு பிரஸ்' என்ற கம்பெனிக்கு விற்றோம்.

பிறகு ஒரு நாள் நானும் எங்கள் பிரஸ் மேனேஜர் கண்ணனும் சிவகாசிக்குப் போயிருந்தபோது, ஆவலின் காரணமாக அந்த மெஷின் எப்படி வேலை செய்கிறது என்பதைப் பார்க்க விரும்பி குரு பிரஸ்ஸுக்குப் போனோம்.

'இது நாங்கள் விற்ற மெஷின்தானா?' என்று வியக்கும்படியாக அந்த மெஷின் புதுப் பொலிவு பெற்றிருந்தது. புதிதாக பெயிண்ட் பண்ணி பளபளவென வைத்திருந்தார்கள். 'ஒரு நாளைக்கு எவ்வளவு இதில் பிரிண்ட் பண்றீங்க?' என்று கேட்டோம்.

'ஒரு லட்சம் காப்பீஸ்' என்று வந்த பதிலைக் கேட்டு அசந்து போனோம்.

இதே மெஷின் எங்கள் தொழிலாளர்களின் பராமரிப்பில் இருந்தபோது, 'பதினெட்டாயிரம் காப்பீஸ்' தருவதற்கே நொண்டியடித்தது. சிவகாசிக்குப் போனபின் கிட்டத்தட்ட ஐந்து மடங்கு அதிகமான 'அவுட்புட்' கிடைத்தது. அதே சமயம் ஊழியர்களின் சம்பளம் பற்றி விசாரித்தபோது நாங்கள் கொடுத்து வந்த சம்பளத்தில் ஐந்தில் ஒரு பங்குதான் 'குரு பிரஸ்' கொடுத்து வந்தது தெரிந்தது. எப்பேர்ப்பட்ட வித்தியாசம்!

சில மெஷின்களை விற்றுவிட்டாலும் சிறிய அளவில் ஒரு பிரஸ்ஸை நடத்தி வந்தோம். அளவு சிறியதாக இருந்ததால் லாபம் கிடைத்தது. ஆனால் ஊழியர்களோ 'பிரசாத் பிராஸஸ்' ஊழியர்களின் சம்பளத்தோடு தங்கள் சம்பளத்தை ஒப்பிட்டு 'அதே மாதிரி வேண்டும்' என்று கேட்கத் தொடங்கினார்கள்.

(தொடரும்)








முத்தமிழையும் தாண்டி நான்காவது 'சங்க'த் தமிழை தமிழர்களின் வாய்க்குள் வாழவைக்க நாள்தோறும் பாடுபடும் தமிழ்க் குடிதாங்கி அய்யாவும், இடிதாங்கி திருமாவும் அடுத்தகட்ட திட்டத்தில் இறங்குகிறார்கள். சினிமாவில் தமிழ் 'தர்ம அடி' வாங்குமிடம் நடிகைகளின் நாக்கில்தான். நயன்தாரா, நமீதா, ரீமா சென் இவர்களுக்குத் தமிழ் டியூஷன் எடுக்கிறார்கள். உதவிக்கு டி.ஆர். வடிவேலு. சவுண்டு ஆரம்பமாகிறது...



**வடிவேலு** : 'பத்தியுள்ள பூனை பர மண்டலத்துக்குப் போச்சாம், நெத்திலி மீனை வாயில கவ்விக்கிட்டு' அப்படில்ல இருக்கு கதை! என்னய்யா இது! வம்புல மாட்டி விட்டுட்டீகளே!

**மருத்துவர்** : அதெல்லாம் எனக்குத் தெரியாது. குறைந்தபட்சம் நாங்க வைச்சிருக்கிற பெயர்ப் பலகைகளை வாசிக்கிற அளவுக்காவது 'தமிழ்' இவங்களுக்குக் கத்துக் கொடுக்கறீங்க. ஆரம்பிங்க.

**நயன்தாரா** : இவிட எந்தா நடக்குது?

**நமீதா** : ஆக்சுவலா, ஐ காண்ட்...

**திருமா** : ஆத்தா, நிறுத்து. அயல் மொழியை நிறுத்து. தமிழ் சினிமா உனக்குச் சோறு போடுது. நீ ஏன் அதைக் கூறு போடுத. தமிழ்ல பேசப் படிச்சுக்கோ! இல்ல உங்க ஊருக்கு வண்டியைப் புடிச்சுக்கோ!

**நமீதா** : ஹே.. ஐ டோன்ட் அண்டர்ஸ்டேன்ட். வாட்ஸ் கோயிங் ஆன் ஹியர்? ஹு ஆர் யூ?

**மருத்துவர்** : வி வில் டீச் யூ தமிழ்!

**வடிவேலு** : ஊருக்கெல்லாம் சொல்லிப்புட்டு, எய்யா, நீங்களே இங்கிலீஷ்ல பேசலாமாய்யா?

**மருத்துவர்** : *(சுதாரித்துக் கொண்டு)* பாடத்தை ஆரம்பிங்க.

**வடிவேலு** : புள்ளைகளா! ஒழுங்கா கவனியுங்க! 'ஆ ஆ...'

**திருமா** : பாடம் நடத்தச் சொன்னா, படத் தலைப்பை சொல்லுறீங்க! இதெல்லாம் இங்க சொல்லக்கூடாது. மேல போங்க!

**வடிவேலு** : *(மனதிற்குள்)* என்னய்யா இது. ரவுண்டு கட்டி பேசுற நம்மகிட்டயே சவுண்டு உடுறாங்களே. என்னத்தைச் சொல்ல... *(தொண்டையை கனைத்துக் கொண்டு)* அ... அம்மா, ஆ... ஆட்சி... இ... இலை

**ராமதாஸ் :** இதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

**வடிவேலு :** டிஸ்டர்ப் பண்ணாதீங்க. அப்புறம் எனக்கு பள்ளிக்கூடத்துல சொல்லிக் குடுத்தது மறந்து போயிரும். அழுதுடுவேன்.

**டி.ஆர். :** 'அ'ன்னா அம்மா. மத்ததெல்லாம் சும்மா! 'ஆ'ன்னா ஆட்சி! நான் கதை!

**ரீமாசென் :** இது திர்வஸ்கமா?

**வடிவேலு :** கிழிஞ்சது போ! ஆங்... தெருவாசகம்!

**மருத்துவர் :** இதெல்லாம் சரிப்படாது. நானே கத்துக் கொடுக்கிறேன். 'அ'ன்னா 'அம்மா' கிடையாது. 'அ'ன்னா அன்புமணி, 'இ'ன்னா இராமதாசு.

**டி.ஆர். :** 'சி'ன்னா சிம்பு! மன்மதன் தந்தான் தெம்பு! வல்லவன்




# அ... ஆ!

விடுவான் அம்பு! ஆ வருங்கால சி.எம். நீ நமட, தமிழனோட மனசாட்சி! 'இ'ன்னா இலை! நான் என்னிக்கும் மலை!

**ரீமாசென் :** வாவ்! டி.ஆர்.ஜி. திர்க்குரள் சூப்பர்!

**நயன்தாரா :** உனக்கு என்ன பிறாந்தோ! இது திருக்குறள் இல்ல கேட்டியோ! இது திருவாசகம்.

**வடிவேலு :** நாசமாப் போச்சு! ஒரு நலன் இழுப்பமானா, எருது மைத்துனங் கொண்டாடுமாம்ல. அப்படில்ல போது

**ரீமாசென் :** பாயி, நா 'வல்லவன்'ல ஆக்ட் கொடுக்குது. மேரா நெகட்டிவ் ரோல் பண்ணுது. நீங்க அப்புறம் பாக்குது.

**திருமா :** தாயி, என்ன தாயி பேசுது? தமிழ் ஏன் உன் நாக்குல இப்படி குதிக்குது? நான் பழமொழி சொல்றேன். திருப்பித் திருப்பிச் சொல்லுங்க. அப்புறம் தமிழ் உங்க நாக்குல தாண்டவமாடும். கேட்டுக் கோங்க. 'ஏழைக்கிழவன் வாழைப்பழத் தோல் வழுக்கி விழுந்தான்'.

**நமீதா :** யா... இட்ஸ் நைஸ்.. ஐ டெல்.

ஏலு... தென்... வாலு... தோலு... இட்ஸ் டஃப்யா!

**ரீமா** : ஸோ... ஃபன்னி... ஐ டெல் வட்வேல் சார். திர்ப்பி சொல்ங்கோ!

**வடிவேலு** : ஊர்ல நாமெல்லாம் இருந்த இருப்புக்கு, இதெல்லாம் ச்சும்மா! நாங்கள்லாம் நாக்க சுழட்ட ஆரம்பிச்சா எக்ஸ்ட்ரா நானூறு குறளு வந்து விழும்ல.. இப்ப சொல்றேன் பாரு...

வாழக்கிழவன் ஏழைப்பழத்தோல் விழுக்கி வழுந்தான்... அய்யய்யோ... எங் கேயோ இடிக்குதே?

**திருமா** : கதை கெட்டுப்போச்சு. நல் லெழுத்து நடுவுல இருக்க, கோண எழுத்த குறுக்கப் போட்டாளாம்.

**டி.ஆர்.** : ஐயோ! இந்தப் பழமொழி என் நெஞ்சை தொட்டுடுச்சு! ஏன்னா என்னைச் சூரியன் சுட்டுடுச்சு!



**மருத்துவர்** : இது வேலைக்கு ஆகாது. நான் சொல்றதைப் படிங்க. உயிர் எழுத்து 12. மெய் யெழுத்து 18. ஆய்த எழுத்து 1.

**நமீதா** : யா, ஐ ஸா 'ஆய்தெ எத்து...' மணிஜி பிலிம் நைஸ்யா?

**மருத்துவர்** : கசட தபற...

**நயன்தாரா** : அது அங்கிட்டில்லா. 'கற்க கசடற' - புது படமாக்கும்!

**மருத்துவர்** : யரளவழுல...

**ரீமாசென்** : யார்லாம் வர்ல?

**மருத்துவர்** : ம்... தமிழ்தான் வரல. இது சரிப்படாது. இனிமே புதுப் போராட் டத்தை புகுத்த வேண்டியதுதான்.

**திருமா** : நான் இதை ஆதரிக்கிறேன்.

**வடிவேலு** : *(மனதிற்குள் - கூரையேறி கோழியைப் பிடிக்காதவன். வானங்கிறி வைகுண்டம் காட்டவா போறான். இதே சோலியாப் போச்சு.)*

**மருத்துவர்** : இனி தமிழ் பேசத் தெரியாதவங்க, தமிழ் சினிமாவுல நடிக்கக் கூடாது. திருக்குறள், நான்மணிக்கடிகை, குறுந்தொகை இதுல ஏதாவது ஒன்றை படிச்சு என்கிட்ட ஒப்பிச்சுட்டு, பா.ம.க. தர்ற சான்றிதழை வாங்கிட்டுத்தான் வாய்ப்பு தேட ஆரம்பிக்கணும்.

**வடிவேலு** : *(டென்ஷனாகி மனதிற் குள் - அய்யய்யோ, பத்தியோட பாவக் காய, சட்டியோட தியறாப்பல ஆக்கிப்புட் டாகலே, இதுக்கெல்லாம் பயந்துதானே பாதியில பள்ளிக்கூடத்தை விட்டு ஓடி யாந்தோம். திரும்ப மணியடிக்க வைச்சுரு வாங்க போலருக்கே!)*

**டி.ஆர்.** : அதெல்லாம் முடியாது. நாங்க யானைகுப்தாகூட ஆடு வோம் டான்ஸ். மந்த்ரா பேடி கூட வுடுவோம் உடான்ஸ். மேக்னா நாயுடு கூட செய்வோம் ஜில்பான்ஸ். ஏன்னா அதைத்தான் விரும்புறாங்க ஃபேன்ஸ். இப்ப நீங்க பேசறதெல் லாம் நான்சென்ஸ்.

## பிரச்னை!

'**சச்சின்**' படப் பாடல்களால் பிரச்னை ஏற்பட்டதைத் தொடர்ந்து, இனி வேறு எந்த மொழியிலிருந்தும் இனி வேறு மொழிக்கு டியூனை எடுத்துப் பயன் படுத்துவதில்லை என்கிற முடிவெடுத் துள்ளார் இசையமைப்பாளர் தேவிஸ்ரீ பிரசாத்.

*(பேசிக்கொண்ட போக தூரத்தில் 'லகலகலகலக'வென சத்தம் வர ஆரம்பிக்கிறது.)*

**வடிவேலு** : ஆவ்வ்வ்... *(அழுது கொண்டே)* சந்திரமுகி ஆவியை சத்தம்போட்டு வரவைச்சுட்டீகளே.. பாவி மக்கா! ஆவிகிட்ட என்ன பாஷை பேசப் போறீங்க... ஆவ்வ்வ்...

**குரல்** : லகலகலகலகலக.....

*(அப்புறமென்ன... ஆங்... அதான்.. ஓட்டமேதான்).*

கற்பனை : **முகில்**

'பீப் பீப்' 'பீப் பீப்' - எஸ்.எம்.எஸ். வர்ற சவுண்டு. எடுத்துப்பார்த்தேன். 'என்ன பண்ணுற'ன்னு கேட்டு என் தோஸ்து அனுப்பியிருந்தான். இதுல என்ன அநியாயம்னா, அவன் என் பக்கத்துலதான் உட்கார்ந்திருக்கான். 'என்னடா லூசா நீ'ன்னு வாயால கேட்டா, அதுக்கும் 'ஆமா'ன்னு எஸ்.எம்.எஸ். அனுப்புறான். நைட்டு தூங்கறப்போ, தன்னையறியாம டீ.வி ரிமோட்டை கையில எடுத்துக்கிட்டு எஸ்.எம்.எஸ். மாதிரி டைப் பண்ணுறான். இப்படி எஸ்.எம்.எஸ். அடிமையாகிப்போன அவன், எங்கேயாவது டைப்பிஸ்ட்டா வேலைக்கு சேர்ந்தா துட்டாவது கிடைக்கும். எப்பா... ஜோக்கடிக்கேன்னு நினைக்காதீக! இப்படி 24x7 எஸ்.எம்.எஸ் வாசிகளா வாழ்ந்தீங்கன்னா, புத்திக்கூர்மை போயிடுமாம். 'இன்சோம்னியா' அப்படிங்கிற அழகான பெயருடைய தூக்கமின்மை வியாதியால பாதிக்கப்படுவீங்க. இது, 24x7 இன்டர்நெட் 'சாட்'வாசிகளுக்கும் பொருந்தும், அப்படின்னு லண்டன்ல ஒரு ஆராய்ச்சியோட முடிவு சொல்லுது! 'அய்யய்யோ... எஸ்.எம்.எஸ். அனுப்பாட்டி என் விரலு மிரள ஆரம்பிச்சுடுமே... எப்படித் தடுக்க'ன்னு ஆலோசனை கேக்கறீங்களா...! ஓ.கே. சிம்பிள் ஐடியா! உங்க செல் போன்ல கீ-பேடை கழற்றி தூர எறிஞ்சிடுங்க... எப்படி நம்ம ஐடியா!



பிரிட்டன்ல ஒரு புது கவலை எழுந்திருக்கு, என்ன? கண்ட நேரத்துல கண்ட படி நொறுக்குத் தீனி திங்கறது, உடற்பயிற்சிக்கு ஸ்பெல்லிங் கூட தெரியாம இரியறது, சாணிப் புள்ளையார் மாதிரி உட்கார்ந்துட்டு மணிக்கணக்கா டீ.வி. பார்க்கறது, விடிய விடிய வீடியோ கேம் விளையாடறது இப்படி பல காரணங்களால குண்டா இருக்கறவங்க அதிகரிச்சுட்டாங்களாம். இது சகஜம் தானேன்னு சாதாரணமாக் கேட்காதீங்க சகாக்களே! நான் சொல்றது குண்டுக் குழந்தைகளோட எண்ணிக்கை பிரிட்டன்ல கோக்கு மாக்கா கூடிப்போச்சாம். இந்த விஷயத்துல அமெரிக்காவை 'குண்டுக்கட்டா' இரண்டாவது இடத்துக்கு தூக்கி வைச்சுட்டு, பிரிட்டன் முதலிடத்துக்கு வந்திருக்கு. இதைக் 'குறைக்க' என்ன செய்யலாம்னு யோசிச்சுக்கிட்டு இருக்காங்களாம் நிபுணர்கள். என்னது... குண்டர் தடுப்புச் சட்டத்துல கைது செய்யணுமா? எவன்யா அது குண்டக்க மண்டக்க யோசிக்கறது!

உபியிலுள்ள சங்க்ராம் நகர் கிராமம். அந்த விவசாயிக்கு ஒரு கனவு... 'என்னைத் தோண்டி எடு' என எட்டுக் கை துர்க்கை வந்து சொல்வதாக! திடுக்கிட்டு, தடதடவெனத் தோண்ட... அட அதே எட்டுக் கை துர்க்கை! வறுமையில் வாடிய அந்த கிராமத்துல, இப்போ துர்க்கை கோவிலால வருமானம் சக்கைப் போடு போடுதாம். அட நமக்கும் ஏதாவது கிடைக்கும்னு பகல்லயே தூங்கினேன். பளபளா உடையில மலபார் அசின் வந்துச்சு. 'அசின் தாயே! உன் சிலையை எங்க தோண்டி எடுக்கணும்... எங்க கோயில் கட்டணும்?' அப்படின்னு பயபக்தியோட கேட்டேன். 'தோண்டில்லாம் எடுக்க வேண்டாம். தொண்டை வலிக்கு அனாசின் கிடைக்குமா?'ன்னு அசின் கேட்டுட்டு மறைஞ்சிடுச்சு! இப்போ மூணு நாளா அனாசினோட அலையறேன்... அசினைத்தான் காணும்!

# சின்னான் செய்திகள்



# நீக்குள் விரலை வைத்தால்...

மருதன்

மர பெஞ்சில் அமர்ந்து தேநீர் குடித்துக் கொண்டிருந்த அந்தப் பெரியவரைப் பார்த்து சுகன்யா கேட்டாள். "மூலக்கடைத் தெருவுக்கு எப்படிப் போகணும்?"

"தோ தெரியுதா ஒரு பம்பு செட்டு?" சுகன்யா தலையாட்டினாள். "அங்க ரெண்டு பாதை பிரியும். ஆலமரம் இருக்குற வழியா போய் விசாரிங்க."

பதினைந்து நிமிட துரித நடைக்குப் பிறகு ஒரு பம்பு செட்டு தெரிந்தது. ஆனால் அதில் ஒன்றும் தண்ணீர் பீய்ச்சி அடித்துக் கொண்டிருக்கவில்லை.

ஆலமரம் இருந்த பாதை வழியாக சுகன்யா திரும்பும் பொழுது, சைக்கிளில் வைக்கோலை வைத்துத் தள்ளிக் கொண்டு போன ஒருவன், இவளைப் பார்த்து தன்னிச்சையாக நின்றான். "பத்திரிகையிலிருந்து வரீங்களா?"

"ஆமா, மூலக்கடைத் தெருவுக்குப் போகணும்."

"பொம்மி வீடுதானே?"

சுகன்யா தலையசைத்தாள். அவன் சைக்கிளைத் திருப்பினான். "வாங்க கூட்டிப்போய் விட்டுர்றேன்" சுகன்யா அவசரமாக மறுத்தாள். "பரவாயில்லை நீங்க வழியைச் சொல்லுங்க"

அவன் பதில் பேசாமல் சைக்கிளைத் தள்ளிக் கொண்டிருந்தான். அந்தக் காலை நேரத்திலும் அவன் முகத்தில் முத்து முத்தாக வியர்வை. இவனிடம் ஏதாவது பேசலாமா என்று சுகன்யா யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே அவன் இவள் பக்கம் திரும்பினான்.

"ஒரு வாரமாச்சு. இன்னமும் ஒரு வார்த்தைகூட பொம்மி பேசலை. அப்படியே இடிஞ்சு போய் உக்காந்திருக்கு. குட்டியையும் குடுவானையும் வைச்சுக்கிட்டு இப்படியே வெறிச்சுப் பார்த்திட்டிருந்தா, எப்படி பொழப்பு ஓடும்."

"நீங்க அவங்களுக்குச் சொந்தமா?" என்றாள் சுகன்யா. அவளுக்கு பதில் சொல்லாமல், அவன் வேறு ஏதோ சொல்லிக்கொண்டு போனான். "புருஷனோட ரோஷம், இவளுக்கு மட்டும் இல்லாமப் போகுமா? 'போடா ----- ஜாதிப் பயலே'ன்னு அந்த மேனேஜரு திட்டினவுடனே புசுக்குன்னு முறைச்சவனாச்சே மணி."

ஒரு குறுகலான சந்திற்குள் நுழைந்தது சைக்கிள். பின்னால் அவள் வருகிறாளா இல்லையா என்று கூட திரும்பிப் பார்க்காமல், சற்று வேகமாகவே நடந்து கொண்டிருந்தான் அவன்.

"உங்க வீடு எங்கயிருக்கு?" என்றாள் சுகன்யா.





இம்முறையும் அவன் பதில் எதையும் தரவில்லை. சுகன்யா அவனிடம் கேள்விகள் கேட்பதை நிறுத்திக் கொண்டாள். சரியாகப் பத்து நிமிடங்கள். ஓர் ஓட்டு வீட்டின் வாசலை அடைந்ததும் சைக்கிளை நிறுத்தி "பொம்மி" என்று ஒரு முறை உரக்கக் கத்தினான். அடுத்த விநாடியே சைக்கிளில் ஏறி உட்கார்ந்து வேக வேகமாக மிதித்தபடி காணாமல் போனான்.

அந்த வீட்டை ஒருமுறை பார்த்த சுகன்யா, தன் கைப்பையிலிருந்த சிறிய கேமராவை வெளியே எடுத்தாள். சற்று பின்புறம் நகர்ந்து சரியான கோணத்தில் அந்த வீட்டை இரண்டு புகைப் படங்கள் எடுத்துக் கொண்டாள். எப்படியும் பயன்படும்.

திறந்திருந்த கதவின் இடுக்கு வழியாக வீட்டிற்குள்ளிலிருந்த இருட்டு கசிந்து கொண்டிருந்தது. சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு கதவை ஒரு முறை தட்டினாள்.

"யாரு?" என்ற மெல்லிய குரலையடுத்து வெளியே வந்த பெண்மணி பொம்மிதான் என்று சுகன்யாவிற்குத் தெரிந்து போனது.

எதுவும் பேசாமல் அவள் உள்ளே சென்றுவிட, சுகன்யா அவளைப் பின்தொடர்ந்து சென்றாள். சற்றும் பொருத்தமில்லாமல்

அந்தச் சிறிய அறையில் சந்தன மணம் வீசிக் கொண்டிருந்தது. ஒரு வார்த்தையும் பேசாமல் பாயில் சென்று படுத்துக் கொண்டாள் பொம்மி. தோற்றம், மறைவு என்று தேதிகளை அறிவித்தபடி மணி புகைப்படத்தில் சிரித்துக் கொண்டிருந் தான். அடர்ந்த தலைமுடி. சற்று நீளமான மூக்கு. பென்சில் வைத்து வரையப் பட்டதைப் போன்ற மெல்லிய மீசை. வெள்ளைச் சட்டை, பாக்கெட்டில் ஒரு பேனா. சுகன்யா அந்தப் புகைப்படத்தை உற்றுப் பார்த்தாள். 'உன்னால் எப்படித் தீயை அள்ளி உடலில் கொட்டிக்கொள்ள முடிந்தது?'

'எது உனக்கு அதிக ரணத்தை அளித்தது? நீ அணைத்துக் கொண்ட நெருப்பா அல்லது உன்னை நோக்கி எறியப்பட்ட வசைமொழிகளா? 'ஜாதி சாகணும்' என்று சொல்லி நெருப்பால் உன்னைச் சுட்டுக் கொண்டு செத்துப் போனாயே... செத்ததா ஜாதி?'

தன் கைப்பையை சுவரின் மூலையில் சாய்த்து வைத்துவிட்டு, பொம்மியை நெருங்கினாள் சுகன்யா. அருகிலிருந்த பிளாஸ்டிக் நாற்காலியில் கசங்கிப் போன ரோஜா மாலைகள் பாம்புகள் போல தொங்கிக் கொண்டிருந்தன. பாயின் விளிம்பில் தன் காலை மடக்கி அமர்ந்து கொண்டாள். சுருண்டு போய் ஒரு பூனையைப் போல படுத்துக் கொண்டிருந்த பொம்மி, சுகன்யாவை ஒருமுறை நிமிர்ந்து பார்த்தாள். பொம்மியிடம் எப்படிப் பேசுவது, எதைப் பேசுவது என்று சுகன்யாவுக்கு தெரியவில்லை. அந்த அறையின் அமைதி அவளை விழுங்கிக் கொண்டிருந்தது.

இங்கே வருவதற்கு இரண்டு நாட்கள் முன்புதான் சென்னையிலுள்ள அந்த ஜாதிக் கட்சி அலுவலகத்தின் துணைத் தலைவரை சுகன்யா சந்தித்திருந்தாள். சுழலும் நீல நிற நாற்காலியில் அமர்ந்து தேநீரை உறிஞ்சியபடி, நிறுத்தி நிதானமாக பேசிக்கொண்டு போனார் அவர். "ஜாதி வெறிக்கு எதிரா தீக்குளித்த மணி ஒரு ஒப்பற்ற தியாகி. அவன் சாவதற்குக் காரணமாயிருந்த அந்த மில் முதலாளி கைதாகிற வரைக்கும், தன் கணவனோட உடலை வாங்கிக்க மாட்டேன்னு கட் அண்ட் ரைட்டா மறுத்தாங்களே பொம்மி, அவங்க மணியை விடப் பெரிய தியாகி... இதோ பாருங்க மேடம், பொம்மியையும் அவங்க குழந்தைகளையும் பாதுகாக்கறது எங்களோட பொறுப்பு. போன வாரம் முழுக்க அவங்க கிராமத்தில்தான் இருந்தோம். கலெக்டர் ஆபீஸ் வாசல்ல மாநிலம் தழுவிய ஆர்ப்பாட்டம் செஞ்சோம். ரோடே நிரம்பிடுச்சு. அவங்களுக்கு நிவாரணம் கிடைக்கிற வரைக்கும் எங்க போராட்டம் தொடரும்."

'இதோ, உன் மிருகப் பசிக்கு என் உணவு' என்று ஜாதிப் பேய்க்கு தன்



உடலைக் கொடுத்த மணிக்கு, என்ன நிவாரணத்தை இவர்கள் அளித்துவிடப் போகிறார்கள்? 'எதிர்த்துப் பேசறதுக்கு உங்களுக்கெல்லாம் எங்கிருந்துடா தைரியம் வந்தது? நாயே... த்தூ' என்று மணியின் ஜாதிப் பெயரைச் சொல்லி சாகடித்த அந்த மிருகத்தை கூண்டில் அடைக்கும் வரையில், தன் கணவனின் உடலை வாங்கிக்கொள்ள மாட்டேன் என்று புடைவைத் தலைப்பை இடுப்பில் செருகி, இந்தச் சமுதாயத்தின் முகத்தில் காறி உமிழ்ந்த பொம்மிக்கு என்ன நிவாரணத்தை இவர்கள் கொடுத்துவிடப்போகிறார்கள்?

நினைக்க நினைக்க சுகன்யாவுக்கு ஆச்சரியமாகயிருந்தது. பிழிந்து உலர்த்திய கந்தல் துணிபோல துவண்டு கிடக்கும் இந்தப் பெண்ணா பத்து நாட்களுக்கு முன்னால் போராட்டக் கொடியை உயர்த்திப் பிடித்தாள்? எப்படி முடிந்தது

இவளால்? எங்கிருந்து பிறந்தது இந்த தைரியம்? யோசித்துக் கொண்டிருக்கும்பொழுதே அந்த அறையின் வாசலில் நிழலாட, நிமிர்ந்து பார்த்தாள் சுகன்யா. ஒரு சிறுவன் இவளை தொலைவிலிருந்து உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பொம்மியின் மகனாக இருக்குமோ? தன்னை நோக்கி நெருங்கி வரும்படி சுகன்யா கையசைக்க, அவன் சிறிது தயக்கத்திற்குப் பின்பு ஓடி வந்தான். சத்தம் கேட்டு கண் விழித்த பொம்மி படுக்கையிலிருந்து எழுந்து, தன் தலை முடியை அள்ளிக் கொண்டை போட்டுக் கொண்டாள்.

"யாரு, பையனா?" என்றாள் சுகன்யா.

பொம்மி தலையசைத்தாள்.

"உன் பேரு என்ன?"

"பாபு."

அவன் கையைப் பிடித்து இழுத்து அடுத்த கேள்வியை கேட்க சுகன்யா வாயைத் திறப்பதற்குள் 'பொம்மி' என்று வாசலில் ஒரு குரல் கேட்டது. கதவைத் திறந்தபடி உள்ளே நுழைந்தாள் அவள். இவளது வழிகாட்டி. சுகன்யா மெலிதாகச் சிரித்தாள். அவனுடன் ஒரு வயதான கிழவியும் உடன் வந்திருந்தாள்.

"டேய் செவிடா, பொம்மிக்கும் அந்தப் பொண்ணுக்கும் டீயை ஊத்திக் கொடு" என்றாள் கிழவி. 'ஓ இவனுக்குக் காது கேட்காதா?' சுகன்யா யோசித்தபடி அவன் கொடுத்த கிளாசை வாங்கிக் கொண்டாள். பொம்மி இவளைப் பார்த்த படியே அமைதியாக தேநீரை உறிஞ்சிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்திற்கு பிறகு, பொம்மி பேசத் தொடங்கினாள். அவள் படித்த பள்ளிக்கூடம், அவள் நடித்த நாடகம், ஒரு மழைக்கால மாலையில் மணி அவளைப் பெண் பார்க்க வந்த நிகழ்ச்சி, முதல் முதலாக மணி வாங்கிக் கொடுத்த சிவப்புப் புடைவை (சிவப்புன்னா அவருக்கு உசிரு), பாபு பிறந்த தினம் (அன்னிக்கு 'சோ'ன்னு நல்ல மழை), அடுத்து பிறந்த குமார், வசந்தி (இப்ப பாட்டி வீட்டுக்குப் போயிருக்குங்க)... அவ்வளவுதான். அதற்குப் பிறகு பொம்மியால் எதுவும் பேச முடியவில்லை. தொண்டை அடைத்துக் கொண்டது.

"போதும், நீங்க எதுவும் சொல்ல வேண்டாம்" என்று அவளை அணைத்துக் கொண்டாள் சுகன்யா. தரையில் உதிர்ந்து கிடந்த ரோஜா இதழ்களை ஒவ்வொன்றாகப் பொறுக்கிக் கொண்டிருந்தான் பாபு. மாரிமுத்துவைக் காண வில்லை.

தன் கைப்பையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தபொழுது வெயில் சுரீரென்று சுகன்யாவின் முகத்தைத் தாக்கியது. துப்பட்டாவைப் பிரித்துத் தலைக்கு மேலே விரித்துக் கொண்டாள். கதவருகே தயங்கி நின்ற பாபு ஓடி வந்து அவள் கையைப் பிடித்துக் கொண்டான். "பஸ் ஸ்டாண்டுல வுட்டுட்டு ஓடியாந்துரு" என்று கத்தினாள் கிழவி.

சுகன்யா நடக்கத் தொடங்கினாள். பாபுவின் கைகள் மிகச் சிறியதாக இருந்தது போல் அவளுக்குத் தோன்றியது. பாபு ஏதேதோ பேசிக்கொண்டு வந்தான். இவளால் எல்லாவற்றையும் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்தத் தெருக் கோடியைத் தாண்டுவதற்குள் அருகிலிருந்த சிலர் பேசிக்கொண்டதை இவளால் கேட்க முடிந்தது.

"பத்திரிகை பொண்ணாம்"

"சரிதான், போட்டோ புடிக்க வந்துட்டாங்களா? அது யாரு கூட?"

"அதுதான் போன வாரம் தீக்குளிச்சானே கோடித் தெரு மணி, அவனோட பையன்."

"ஓ அந்த ....... ஜாதிப் பையனா..."

திடுக்கிட்டுத் திரும்பினாள் சுகன்யா. ஆடிக் கொண்டிருந்த அவள் கைப் பையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பாபு, எதையோ நினைத்துக் கொண்டதைப் போல ஒருமுறை நிமிர்ந்து சுகன்யாவைப் பார்த்துச் சிரித்தான். ○

**சந்திப்பு!**

ஆற்காடு வீராசாமியை வீட்டில் சந்திக்க முடியாத தி.மு.கவினர், அண்ணாநகர் ரவுண்டானாவுக்குச் சென்று, அங்கு வாக்கிங் வரும் அவரை சந்தித்துப் பேசுகின்றனர்.

# இன்டர்வியூ!

விஷ்ணுகுமார்

தமிழாசிரியர் பணிக்காக வந்திருந்த விண்ணப்பங்களை பள்ளி முதல்வர் ஹரியிடம் கொண்டு வந்து வைத்தான் ப்யூன்.

எல்லாவற்றையும் பார்த்துவிட்டு மேலாளரை அழைத்தார் ஹரி. ஒரு விண்ணப்பத்தை எடுத்து அவரிடம் நீட்டி "இந்த கேண்டிடேட்டுக்கு அப்பாய்ன்மெண்ட் ஆர்டர் அனுப்பிடுங்க" என்றார்.

மேலாளருக்கு அதிர்ச்சியாகவும் குழப்பமாகவும் இருந்தது.

''என்ன சார் சொல்றீங்க! இன்டர்வியூ இல்லாம நேரடியா அப்பாய்ன்மெண்ட்டா?''

''ஆமாம். எல்லா அப்ளிகேஷன்களையும் பார்த்தேன். பாதி பேருங்க முழுசையும் இங்கிலீஷ்ல எழுதியிருக்காங்க. கொஞ்சம் பேருங்க இங்கிலீஷ், தமிழ் ரெண்டும் கலந்து எழுதியிருக்காங்க... மூணே மூணு பேர் மட்டும் முழுக்க முழுக்க தமிழ்ல எழுதியிருக்காங்க. அந்த மூணு பேர்ல ரெண்டு பேர் சின்ன தப்பு பண்ணிருக்காங்க... இனிஷியல், கையெழுத்துகளை இங்கிலீஷ்ல போட்டிருக்காங்க. இந்த கேண்டிடேட் மட்டும் தான் எல்லாத்தையும் தமிழ்லயே செஞ்சிருக்காரு. ஒரு மொழி மேல இந்த அளவுக்குச் சுத்தமிருக்கிற ஒருத்தராலதான் அந்த மொழியை சரியா சொல்லித்தர முடியும்! அதான் டைரக்டா அப்பாய்ன்மெண்ட் பண்ணச் சொல்லிட்டேன்.''

திருப்தியுடன் புறப்பட்டார் மேலாளர். ○



# ஜித்தன்

**அ**ன்புள்ள ஜித்தனுக்கு...

கடைகோடி சினிமா ரசிகர்களில் ஒருவனாகிய கொட்டாம்பட்டி கோவிந்தராஜ் எழுதுவது... ரிலீஸ் அன்றே உன்னைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவல். உசிலம்பட்டிக்கு மூச்சுவாங்க சைக்கிள் மிதித்து... கண்ணன் தியேட்டரில் அடித்துப் பிடித்து டிக்கெட் வாங்கி உட்கார்ந்தேன்.

சோடாபுட்டிக் கண்ணாடி அணிந்து, குறுகுறுக்கும் கண்களில் கோழைத்தனம் குடித்தனம் நடத்த, எல்லோரிடமும் இடிவாங்கும் இளிச்சவாய் அப்பாவியாக உன்னைப் பார்த்தபோது, அழுகாச்சியா வந்தது. ராட்சஸி அம்மாவிடம் அடிவாங்கிக் கொண்டு, பிறப்பையே வெறுக்கும் உனக்கு அடிச்சது ஒரு லக்கி ப்ரைஸ். அதாகப்பட்டது கடற்கரை பாறை இடுக்கில் உன் கையில் அகப்பட்ட அய்யனார் சிலை, யார் கண்ணிலும் தெரியாதவாறு உன் உருவத்தை மறைத்துவிடும் வரத்தை தந்துவிட, உனக்கு மட்டுமில்லை எனக்கும் ஒரே கொண்டாட்டம்தான் போ!

இந்த மாதிரி ஒரு வரம் எனக்கு மட்டும் கிடைத்திருந்தால், காதும் காதும் வெச்சமாதிரி லைஃப்லே செட்டிலாகி இருப்பேன். நீ என்னடான்னா! எதிர்த்த வீட்டு தேவதை பூஜாவை, சின்ன வயசுலேர்ந்து காதலிக்கிறேன்னு சொல்லிட்டு அவளைப் போய் பூச்சாண்டி காட்டி பயமுறுத்துறே! கடவுள் வந்திருக்கேன்னு சொல்லி அவளையும், அவள் காஸ்ட்லி காதலனையும் சூப்பரா கலாய்க்கிறே! போதாக்கொறைக்கு கனவுல டூயட் பாடுறே. ஆஹா... எங்கியோ இடிக்குதே... எங்கேன்னு பார்த்தா, தமிழ்ல டப் பண்ணி வந்த 'ஹாலோமேன்' ஹாலிவுட் படம் நியாபகம் வந்துடுச்சி. அப்புறமா இந்த 'கோஸ்ட்', 'இன்விஸிபிள் மேன்'னு எத்தனை இங்கிலீஷ் படம் இதே ஐடியாவோட வந்துருக்குது. இதுல என்னா காமெடின்னா மூலக்கதை ராம்கோபால் வர்மான்னு டைட்டில் போடுறீங்க. நான் கேக்குறேன்... ஹாலிவுட்டுலேர்ந்து கதையைத் திருடிக் கொடுத்தா அதுக்குப் பேருதான் மூலக்கதையா?

அது போகட்டும்! ரொம்ப நாளைக்கு அப்புறம் வின்சென்ட் செல்வா டைரக்ட் பண்ணியிருக்குற படம். நீயும் நல்லாத்தான் நடிச்சிருக்கே.. (அறிமுகம் ரமேஷ்) உனக்குள்ளே இருக்குற நல்லவன், கெட்டவன்கிற ரெண்டு கேரக்டரையும் வெளிப்படுத்த நல்லா முயற்சி பண்ணியிருக்கே! இருந்தாலும் கோலிவுட் ரேஸுக்கு இந்த வேகமெல்லாம் போதாது. நியாபகம் வெச்சிக்க!

இந்த மாதிரி ஒரு கதைக்கு கிராபிக்ஸ் காட்சிகள்தான் முதுகெலும்பு. இன்னும் கொஞ்சம் லேட்டஸ்ட் கிராபிக்ஸ் தொழில்நுட்பம் பயன்படுத்தியிருந்தா... தியேட்டர்ல கூட்டம் மொய்க்கும். இப்போ மட்டும் என்னாங்கிறியா? மொய்க்குதா மொய்க்கலையான்னு அதுக்கப்புறம் நா எங்கே பார்த்தேன். என்னைக் கேட்டாங்க. பரவாயில்லைன்னு சொன்னேன். இப்போ எதுக்கு இந்த லெட்டர்னா... ஜித்தன் பார்ட்-டூன்னு மறுபடியும் வேற உருவத்துல வந்துடாதேன்னு சொல்றதுக்குத்தான்.

இப்படிக்கு

**கோவண்ணா**

'மகளுக்கு பன்னிரண்டு வயது ஆனதும் 'எதிர்பாலினரிடம் கவர்ச்சி ஏற்படுவது இயல்பானதுதான்' என்று அம்மா கூறலாம் என்று இந்தப் பகுதியில் கூறியிருக்கிறீர்கள். இதையே ஒரு லைசென்ஸாக வைத்துக்கொண்டு அந்த இளம் பெண் மனதைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல் போனால் சிக்கல்கள் வருமே!

- வே. சுகன்யா, சென்னை - 40

**டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர் :**

டீனேஜில் உடலில் பலவித ஹார்மோன்கள் சுரக்கின்றன. இது குறித்த ஒரு விளக்கமாகத்தான் அம்மா மகளிடம் அப்படிக் கூற வேண்டும் என்று சொன்னேன். சில அடிப்படை விளக்கங்களைச் சொல்வது தவறுகளுக்கான லைசென்ஸாகாது. அது ஒரு பாதுகாப்பு முறை. 'இந்த உடல் மாறுதல்கள் இயல்பானவை. இதற்காக அச்சப்படக் கூடாது. எந்தப் பிரச்னையாக இருந்தாலும் அதை என்னுடன் கலந்து ஆலோசிக்கலாம். உன் நண்பர்களையோ மற்றவர்களோ சொல்வதைவிட, என்னால் உனக்கு அவற்றை நல்லவிதமாக கவனத்துடன் விளக்க முடியும்' என்று மகளிடம் கூறிவிட்டால், விளைவுகள் சிறப்பாக இருக்கும். பல சிக்கல்களில் இருந்து வருமுன் காக்க முடியும்.

## "தலைவலிக்கு நீங்களாக மாத்திரை எடுக்கக் கூடாது!"

## பாலி க்ளினிக்



என் கழுத்துப் பகுதியில் சின்னச் சின்ன மருக்கள் தோன்றியுள்ளன. இவற்றை எப்படிப் போக்குவது?

- ஆர். மாலினி, மதுரை

எம். ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக்கலை நிபுணர் :

இஞ்சிச் சாற்றையும் சின்ன வெங்காயச் சாற்றையும் கலந்து கொள்ளுங்கள். பிறகு முகத்தை நன்கு சோப்புப் போட்டு (ஆன்டி - பாக்டீரியல் சோப்பு போடுவது நல்லது) கழுவி விட்டுக்கொள்ளுங்கள். பிறகு மேற்படி கல

வையை பருத்தி 'பட்' (cotton bud) மூலமாக எடுத்து, இந்த மருவின் மேலும் அதன் அடிவாரத்திலும் தடவிக் கொள்ளுங்கள். பலவீன மான, சிறிய மருக்கள் தானாக உதிர்ந்துவிடும். பெரிய, நீண்ட நாள் மருக்களை அகற்ற நவீன சிகிச்சை உள்ளது. அழகுக்கலை நிபுணரை நாடுங்கள்.

**எனக்கு சிசேரியன் முறையில் பிரசவம் ஆகியிருக்கிறது. என் தினசரி வேலைகளை எப்போதிலிருந்து செய்யத் தொடங்கலாம்? தையல் பிரிந்து சிக்கல் ஏற்படுமோ என்று பயமாக இருக்கிறது.**

**- வேதவல்லி, ஓசூர்**

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி, மகப்பேறு மருத்துவர் :**

மருத்துவ ரீதியாகச் சொல்வதென்றால், பிரசவம் ஆன ஆறு வாரங்களில் தையல் போட்ட இடம் ஆறிவிடுகிறது. எனவே ஒன்றரை மாதம் ஓய்வெடுத்துக் கொண்டால் போதும். பிரசவம் ஆனால் மூன்று மாதங்கள் முடிந்ததும் அலுவலகத்துக்குப் போகலாம். அதேபோல் மூன்று மாதங்கள் ஆனபிறகு உங்கள் வழக்கமான தினசரி வேலைகளைச் செய்யத் தொடங்கலாம்.

## பெண்களுக்கான மருத்துவப் பகுதி



• Dr. அனிதா



• Dr. ஜெயந்தினி



• Dr. ஜெயந்தி



• எம்.ஹசீனா

தால் இப்படி எல்லாம் சொல்ல முடிகிறது. ஆனால் அடுத்த குழந்தை குறைந்தது மூன்று வருட இடைவெளிக்குப் பிறகு பிறக்குமாறு திட்டமிட்டுக் கொள்ளுங்கள்.

**என் நான்கு வயது மகள் அவ்வப்போது தலைவலி என்கிறாள். இது பயப்பட வேண்டிய விஷயமா?**

**- சு. கலைவாணி, ஊட்டி**

**டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன், குழந்தை நல மருத்துவர் :**

தலைவலி என்றவுடனேயே மூளை பாதிப்பு என்று பயப்பட வேண்டாம். மூக்கடைப்பு, கண் பார்வைக் கோளாறு, காதுவலி, பல்வலி, காய்ச்சலுடன் கூடிய ஜலதோஷம், உடலில் குளுக்கோஸ் அளவு குறைதல் போன்ற காரணங்களால் தலைவலி உண்டாகலாம். கண்களை அடிக்கடி தேய்த்துக் கொள்வதோ, கண்கள் சிவப்பாக இருப்பதோ என்றால் கண்ணில் ஏதோ கோளாறு என்று அர்த்தம். தலைவலியோடு வாந்தியும் இருந்தால் உடனே டாக்டரிடம் காண்பியுங்கள். பொதுவாக குழந்தைகளுக்குத் தலைவலி என்றால், நீங்களாக எந்த மாத்திரையையும் கொடுக்காமல் இருப்பதுதான் நல்லது.

# தவறுகளுக்கு லைசென்ஸா?

ஏரோபிக்ஸ் போன்ற பயிற்சிகளைக்கூட மூன்றுமாத முடிவில் செய்யலாம் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். இப்போது எல்லாம் தைப்பதற்கான இழைகளும், அறுவை சிகிச்சை முறையும் வெகுவாக முன்னேறிவிட்ட

**- ஜி.எஸ்.எஸ்.**



# யார் இந்த சூர்யா?

திடீர் மழை! தகவல் தராமல் வருகை தரும் விருந்தாளியைப் போன்று, மிக்க அழகானது, சுவடு தெரியாமல் வரும் கோடை மழை. பெரிய துளிகளால் தலையிலும், முகத்திலும் தண்ணீர்ப் பொட்டு வைத்து ஆசீர்வதிக்கத் தொடங்கிய மழை, மெல்ல வேகமெடுத்தது.

"சார் நனையாதீங்க!" - எனது டச்-அப் உதவியாளர் குரல் கொடுத்தார். மழை சிலரைப் பதற்றப்படுத்துகிறது. இன்னும் சிலரை "பொழப்பை கெடுத்துடுச்சுப்பா" என்று சபிக்க வைக்கிறது. எனக்கோ கடல்மீது பொழியும் மழையின் அழகைக் காண வேண்டும் என்றொரு ஆசை.

மாமல்லபுரம் அருகே, கடற்கரை ஓரமாய் ஒரு பொழுதுபோக்குப் பூங்கா. அங்கே சஜினி படத்தின் படப்பிடிப்பு. திடுமென வந்துவிட்ட பெருமழை, பிற்பகல் சூரியனை பேக்-அப் செய்து விட்டதால், படப்பிடிப்புக்கும் பேக்-அப் சொன்னார் இயக்குனர். அடுத்த கணமே கடலை நோக்கி என் கால்கள் நடந்தன. என்னைப் பின் தொடர்ந்த உதவியாளரை "ப்ளீஸ் இப்போ வந்துடுறேன்" எனக் கெஞ்சலாய் தடுத்தேன். எனது தனிமை பாத்திரமாக என்னுடன் நடந்தது.

அலைகளில் ஆக்ரோஷம் இல்லை. மாறாக கடற்பரப்பின் மீது மழை வாசித்த ஜலதரங்கத்தில் கொஞ்சம் கோபம். மெல்ல மெல்ல வேகம் குறைந்து, மெல்லிய தூறலான பிறகு, கண்ணுக்கெட்டிய தூரம் வரை கடலும் மழையும் சேர்ந்து தியானத்தில் ஆழ்ந்துவிட்ட தோற்றம். அதில் நானும் பங்கெடுப்பது போல சிலுசிலுப்பான மழையில் நனைந்து கொண்டிருந்தேன்.

நேரம் போனதே தெரியவில்லை. எப்போது மழைவிட்டது, எனது சட்டையும், ஜீன்ஸும் எப்போது உலர்ந்தன? தூரத்தில் கிளம்பிக் கொண்டிருந்த படப்பிடிப்பு வாகனங்களின் இரைச்சல் என்னை எழுப்பிவிட, அவசரமாய் எழுந்துபோய், ஜில்லீர் அலைகளில் ஒருமுறை பாதங்களை நனைத்துவிட்டு கரையை நோக்கி அடியெடுத்து வைத்தேன். அந்தக் கறுத்த உருவம் ஒரு கணம்

என்னை உலுக்கிவிட்டது. நான் அமர்ந்திருந்த இடத்திலிருந்து நூறடி தூரத்தில் பதுங்கியதுபோல் அமர்ந்திருந்த அந்த உருவம் ஓர் ஆண். என்னைக் கண்டதும் எழுந்து நின்ற அவருக்கு என் வயதிருக்

# பர்சனல் டைரி 1

படம் : ஸ்ரீஹரி

கலாம். தனிமையில் அகப்படுகிறவர்களை மிரட்டி வழிப்பறி செய்கிற பேர்வழியோ? யோசித்துக்கொண்டே நடக்க ஆரம்பித்த போது, அவர் என்னை நோக்கி வர ஆரம்பித்தார்.

ஒரு கையில் சுடச்சுடத் தேநீர் விற்கும் சில்வர் ஹாட்பேக். மறுகையில் டிஸ்போஸபிள் பிளாஸ்டிக் குவளைகளின் அணிவகுப்பு. இப்போது நெருக்கமாய் அவரைப் பார்க்கிறேன். என்னைப் பார்த்துவிட்ட சந்தோஷம் கண்களில் மின்னியபடியிருந்தது. அவரிடம் தவறான நோக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. அண்மையில் நெருங்கி வந்தும் பேசத் தயங்கினார். உதடுகளோ என்னிடம் பேசித் தீர்க்க வேண்டும் எனத் துடித்தன. தயக்கத்தை நானே தகர்த்தேன்.

"என்ன பாஸ், டீ வியாபாரமா?"

"இல்லே சார் சுக்கு காபி!"

"ஆள் அரவமே இல்லாத இந்த பீச்சுல எப்படி வியாபாரம்?"

"மகாபலிபுரத்துலதான் விக்கிறேன்! உங்க ஷூட்டிங் நடக்குதுன்னு சொன்னாங்க. உங்களைப் பார்த்தே ஆகணும்னு வந்துட்டேன்"

"என்னை வேடிக்கை பார்க்கிறதுக்காக உங்க வியாபாரத்தை விட்டுட்டு வரலாமா?"

"வியாபாரம் என்ன சார்! நான் இன்னைக்கி உயிரோட நின்னு பேசிக்கிட்டு இருக்கேன்னா, அதுக்கு நீங்கதானே காரணம்!"

"..........................!?"

"ரெண்டு மாசத்துக்கு முன்னாடி வரைக்கும் நான் ஒரு பிக்பாக்கெட் சார்! மாமல்லபுரம் வர்ற டூரிஸ்ட்டுகள்கிட்டே பர்ஸ் அடிக்கிறதுதான் பொழப்பு. கரெக்டா மாமூல் கொடுத்துரணும். இல்லேன்னா ஒட்டடை அடிக்கிறது. பெயிண்ட் பண்றது, வாட்டர் டேங் கழுவுறதுன்னு, அடிமை மாதிரி வீட்டு வேலை செய்யணும். இதையெல்லாம் பொறுத்துக்கலாம். ஆனால் இஷ்டத்துக்கு பொய் கேஸு போட்டுப் போட்டே திருந்தவிட மாட்டானுங்க. கடைசியா எம்மேலேயும் ஒரு கேஸு போட்டாங்க. உள்ளே போயிட்டு திரும்பி வந்தேன். 'உன் போட்டோ போலீஸ் ஸ்டேஷன் போர்டுல ஒட்டியிருக்கு'ன்னு பசங்க ஓடி வந்து சொன்னாங்க. ஈரக்கொல அந்துப் போன மாதிரி நெஞ்சுக்குள்ள வலி. கோபத்தோட போய் நியாயம் கேட்டேன். 'இவரு பெரிய காந்தி. வந்துட்









டாரு. உம்மேல போர்ஜெரி கேஸ் அதிகமாயிடுச்சி. அப்படித்தான் ஒட்டுவோம் னாங்க'. எல்லாம் உங்க இஷ்டத்துக்கு போட்டுக்கிட்ட கேஸுங்கதானேன்னு கத்துனேன். 'உன்னைப் பத்தி கவலைப்பட யாருடா இருக்கா பொறம்போக்கு'ன்னு அடிச்சு விரட்டினாங்க. அந்த நிமிஷமே முடிவுவெடுத்துட்டேன்... இந்த ஈனப் பொழப்போட போராடுறதவிட, பொசுக்குன்னு செத்து இவனுங்க மொகத்துல கரியப் பூசுவோம்னு பெனாயில் வாங்கிட்டேன். சாப்பாடு இறங்கல. சாகறதுக்கு முன்னாடி ஒரு தபா படம் பார்த்துருவோம்னு நைட்ஷோவுக்குப் போனேன்.

மாயாவி படம். படம் ஓட ஓட, அதுல வர்ற பாலைய்யா நான்தான்னு தோணுச்சி. தியேட்டர்ல எல்லாரும் சிரிச்சுக்கிட்டே இருந்தாங்க. நா மட்டும் அப்பப்போ அழுதுக்கிட்டே இருந்தேன். ஆனாலும் படம் முடிஞ்சப்போ ஒரு தெம்பு வந்துருச்சி. போலீஸ் கையால அடிபட்டுச் சாகறதைவிட, பாலைய்யா மாதிரி நல்லவனாவும், புத்திசாலியாவும் வாழ்ந்துட்டா எவன் என்ன செய்ய முடியும்னு ஒரு வீராப்பு! பெனாயிலத் தூக்கி டாய்லெட்ல போட்டு உடைச்சுட்டு, வெளியே வந்துட்டேன்.

"இப்போ சொந்தத் தொழில். யார் வயித்துலயும் அடிக்கல. டெய்லி நூத்தம்பது ரூபா கெடைக்குது. எனக்கு இதுபோதும் சார். என்னிய வேண்டாம்னு சொன்ன அப்பாவும், அம்மாவும், இப்போ அனுசரணையா இருக்காங்க. போலீஸ்காரங்களும் கம்முன்னு ஆயிட்டாங்க. வாழ்க்கைய முடிச்சுக்கலாம்னு முடிவு கட்டுன நேரத்துல, உங்க மாயாவிதான் காப்பாத்திவிட்டுச்சு. நான் முன்னாடி கெட்டவன்தான். ஆனா இப்போ நல்லவன். என் மனசத்தொட்டு சொல்றேன் சார். நீங்க நல்லா வருவீங்க. உங்க படத்தை இனிமே விடமாட்டேன்."

கலங்கிய கண்களோடு கையெடுத்துக் கும்பிட்ட அந்த மனிதனின் கைகளை இறுகப் பற்றிக் கொண்டேன். "நான் அடுத்தமுறை உங்களைப் பார்க்கறப்போ நீங்க இன்னும் பெரிய ஆளா இருக்கணும்" சொல்லிவிட்டு பத்தடி தூரம் நடந்திருப்பேன்... மூளைக்குள் ஏதோ இடறியது. அய்யோ! அவரது பெயரைக் கேட்கவில்லை. சட்டென்று திரும்பி "உங்கப் பேரைச் சொல்லலியே" என்றேன். "நான் சரவணன் சார்" என்றார். மீண்டும் எனக்குள் மின் அதிர்ச்சி. என்னுடைய பெயரும் அதுதானே!

ஆச்சர்யமாக இருக்கிறது! சூர்யா என்கிற இந்த சரவணன் நடித்த பாத்திரம், சாகத் துணிந்த ஒருவரை கைப்பிடித்துக் காப்பாற்றியிருக்கிறது இன்று. ஆனால் இதே சூர்யா ஐந்து வயதே நிரம்பிய சிறுவனாக அன்று செத்துப் போய்விட விரும்பியவன். தரையில் கிடந்த சிறு செங்கல் துண்டை எடுத்து, 'I want to die' என்று சிவப்பாக எழுதினேன். அத்தனை சிறிய வயதில் ஏன் அப்படித் தோன்றியது? யார் காரணம்?

**(டைரியை தொடர்வேன்)**



நேற்று என்ன புதுசா வந்துச்சு... இன்னைக்கு என்ன வந்திருக்கு... நாளைக்கு என்ன புதுசா வரப் போகுதுன்னு, (அட கார்களைப் பத்தித் தான்.) டாப் கியர்ல தகவல்களை ஓட விடுற தளம் carlist.com 'ஃபயரா பறக்கும் டயரு, ஹைடெக் டெக்னாலஜி கியரு, பப்பளபளா பாடி, ஜகஜ் ஜகா மிரரு, 2005 ஹோண்டா சிவிக் ஹைபிரிட் கார், அல்வா சாலையில் வளவளா பயணம்' என திரைவிமர்சனம் போல் புது கார்களை விமர்சனம் பண்ணுகிறார்கள் இங்கே. ஆட்டோமொபைல் செய்திகள் டிராபிக் ஜாமாகிக் கிடக்கின்றன எக்கச்சக்கமாய். உலக அளவில் இயங்கும் ஆட்டோமொபைல் தளம் இது. இந்திய ஆட்டோமொபைல் சமாசாரங்களைத் தெரிந்துகொள்ள நீங்கள் 'ஹார்ன்' செய்ய வேண்டிய முகவரி




automobileindia.com. பைனான்ஸ், ஓரப்ரி கண்ட்ஸ், பெட்ரோல் ஸ்டேஷன்ஸ், ஸ்பேர்ஸ், டயர்ஸ் என பல பாதைகளில் தகவல்கள் விரிகின்றன. அனைத்தையும் அப்டேட்டாக அள்ள



* உலகின் மிக நீள புகைப்படம் (e-mail படம்)

வலைபாயுதே

இன்டிகேட்டர் போட்டு ஸ்டியரிங்கை ஒடிங்க இந்தப் பக்கம்.

டௌன்லோட் :

"என்னோட அஞ்சு வயசுப் பையன் ஆகாஷ், அழகா ப்ரௌஸ் பண்ணுவான். ஈமெயில் செக் பண்ணுவான்" என உங்கள்

# 'ஹார்ன்' செய்யுங்க!




குழந்தைகளைப் பற்றி பூரிக்கலாம். ஆனால் குழந்தைகள் ப்ரௌஸ் பண்ணுகையில், 'வயதுக்கு வந்த' தளங்களை, விஷயங்களை அவர்களது கண் பார்வையில் இருந்து தடுப்பதும் பெற்றோரின் பொறுப்பே! குழந்தைகளுக்கான பாதுகாப்பான ப்ரௌஸரைத் தருகிறது www.kidrocket.org/kidrocket.099f.exe ரொம்பத் தேவையானதை இறக்குமதி பண்ணிடுங்க.

தமிழ் :

"இரு நாடுகளுக்கிடையில் அமைதியும், நல்லுறவும் நிரந்தரமாக ஏற்படுவதென்பது காஷ்மீர் பிரச்னைக்கு தீர்வு காண்பதில்தான் இருக்கிறது. காஷ்மீர்ப் பிரச்னை இவ்வளவு தூரம் சிக்கலானதாக மாறியதற்கு இந்திய ஆட்சியாளர்களே பெரிதும் பொறுப்பு என்பது ஒரு கசப்பான உண்மையாகும்" - காலச்சுவடு மே இதழின் தலையங்கம்தான் இது. நெட்டில் காலச்சுவடை முழுமையாகப் படிக்க kalachuvadu.com.

- ப்ரௌஸர்

கல்கியைப் பாருங்கள்.
அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருங்கள்.

- ஆர்



# ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் ஜயந்தி - 24.5.2005 வைகாசி, அனுஷம்

ஒரு காலத்தில் நமக்கு சாந்த குணம் இருக்கிறது, மற்றொரு சமயத்தில் கோபம் இருக்கிறது. ஆனாலும் இரண்டு அவஸ்தையிலும் இருப்பவன் ஒருவனே என்பது அனுபவத்தில் தெரிகிறது. அவஸ்தா பேதங்களில் நம் முகம், கைகால் எல்லாவற்றின் போக்கும் மாறுகின்றன. கால பேதத்தால் குழந்தை கிழமாகிறபோது தேகங்கூட வேறாக மாறுகிறது. இது விவகார உலகத்தில். ஸ்வப்பன உலகத்திலோ கேட்கவே வேண்டாம். நம் ஒருவருடைய மனஸிலிருந்தே பல பேருடைய ரூபங்கள், பல வேறு இடங்கள், பல வேறு காலங்கள் எல்லாம் கனவில் உண்டாகின்றன. நாம் செய்யக்கூடாதென்று நினைக்கிற காரியங்களையெல்லாம், கனவில் செய்வதாகக் காண்கிறோம். இம்மாதிரி அவஸ்தா பேதங்களில் ஒன்றுக்கொன்று விரோதமான காரியங்களைச் செய்தாலும், வேறு வேறு விதமான தேகமும் மனஸும் இருந்

# அருள்வாக்கு

தாலும், எல்லா அவஸ்தைகளிலும் இருப்பவன் ஒருவனே என்பது தெரிகிறது. நமக்கு ஜன்னி பிறந்தால் அதற்குமுன் நாம் செய்த காரியங்களுக்கு விரோதமாகச்

செய்கிறோம். நாம் முன்பு ஒரு புஸ்தகம் எழுதியிருந்தால், இப்போது அதை நாமே கிழித்து விடுகிறோம். எழுதியவனும் கிழித்தவனும் ஒரே பேர்வழி.

இந்த உலகமும் ஒரு கனவுதான். உலக வாழ்வும் மாயா ஜுரத்தில் வந்த ஜன்னி என்று தெரிந்து கொண்டால், உண்மையில் எல்லாம் ஒன்று என்று உணர்வோம். நம் கனவில், நம் ஒருத்தரின் மனமே இத்தனை பேரை சிருஷ்டித்த மாதிரி, மகாபெரிய மனசு ஒன்றின் எண்ணங்கள்தான் இத்தனை ஜீவராசிகளும் என்று தெரியும். மற்றொருவன் நாம் எழுதிய புஸ்தகத்தைக் கிழித்தால் அவனும் நாம்தான் என்று உணர்வோம். விவகார உலகத்தில் எழுதியவனும் கிழிப்பவனும் வெவ்வேறு தேகத்தில் இருப்பதனால், வாஸ்தவத்தில் உள்ளேயிருப்பவன் வேறாகி விடமாட்டான். எல்லாவற்றுக்குள்ளேயும் இருப்பது ஒன்றுதான். ஒருவன் நம்மை அடித்தால், வேறொருவன் நம்மை அடிப்பதாக நினைப்பது தப்பு. நாமே நம்மை அடித்துக் கொள்ளுகிறோம் என்பது தான் சத்தியம்.

ஜகத் முழுவதையும் ஒன்றாகப் பார்க்கும் மனோபாவத்தைப் பழக்கிக் கொள்ள வேண்டும். எல்லாம் ஒன்றானால் தானும் பிறரும் வேறு வேறாக இருக்க முடியாது. இந்த அனுபவத்தை அடைந்து விட்டால் அப்புறம் கஷ்டம், பயம், காமம், துவேஷம், எதுவும் நம்மைக் கட்டுப்படுத்தாது. நமக்குப் புறம்பாக எதுவோயிருப்பதாக நினைப்பதால்தான் அதனிடமிருந்து கஷ்டம், பயம், காமம் குரோதம், இத்யாதிகள் நம்மைக் கட்டிப் போடுகின்றன.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



# உள்ளம் துறந்தவன்

மஞ்சரி அழகேசனைப் பார்த்த பார்வையில் வர வேற்பும் சதியும் இருந்தன.

"நிஜமாத்தான் சொல்றியா?"

"நிஜமாத்தான். வாட் இஸ் ராங்!"

"கற்பு பிசினஸ் எல்லாம் உனக்குக் கிடையாதா?"

"உனக்கு கிடையாதுன்னா எனக்கும் கிடையாது."

அறையின் திரைகளை இழுத்து மூடினாள். ஏசியை அதிகப்படுத்தினாள். படுக்கையில் உட்கார்ந்தாள்.

மெல்ல அவளருகில் உட்கார்ந்தான். சுட்டுவிரல் நுனியைத் தொட்டான். கைவிரல்கள் சேர்ந்து கொண்டன. முகங்கள் தொட்டன. மூச்சுகள் ஒருங்கிணைந்தன. உடைகள் தடை நீக்கப்பட்டன.

"இதில் இத்தனை சமாசாரம் இருக்கா?"

"புஸ்தகம் படிச்சதில்லையா நீ."

"புஸ்தகத்தில் இதெல்லாம் கிடையாது."

'டிங்டங்' என்ற சப்தம் மெல்ல உறுத்தியது.

"ஹூ இஸ் இட்!" என்றாள் எரிச்சலுடன்.

"ரூம் க்ளீன் மேடம்!"

"கெட் லாஸ்ட்" என்றாள்.

அழகேசன் மஞ்சரி இருவருக்கிடையே நிகழ்ந்த வேதனையும் விருப்பமும் பரவசமும் கலந்த அந்த மணித்துளிகளை மேலும் விவரிப்பது அநாகரிகம். அது நிகழ்ந்தது என்னவோ முக்கியம். அழகேசன் இறுதியில் சொன்னது மஞ்சரிக்கு உறுத்தியது.

"இனிமே நான் செத்துப் போனாலும் பரவாயில்லை."

அவன் வாயை மூடிய கையை வாங்கி முத்தமிட்டாள்.

"தூ! அப்படியெல்லாம் பேசாதே. இன்னும் எத்தனை தடவை பாக்கியிருக்கு. எங்கெல்லாம் போகப் போறோம். என்னவெல்லாம் பார்க்கப் போறோம். உன்கூட என்னவெல்லாம் சாதிக்கப் போறேன்..."

"மஞ்சு!" என்று கண்களால் கெஞ்சினான்.

"ஆல்ரைட்! போனாப் போவுது" என்றாள்.

சுஜாதா

அறையில் இருந்த டெலிபோன் ஒலித்தது.

"ச்சே! என்ன ஓட்டல்மா இது! முதலாளி மகளுக்கே இந்த இம்சையா? ட்ராப் டெட்" என்றான்.

"மிஸ் மஞ்சரி, திஸ் இஸ் தி ஆபரேட்டர். கால் ஃப்ரம் மினர்வா ஆஸ்பிட்டல். யு வாண்ட் டு டேக் இட்?"

"யா, புட்தெம் ஆன். ஹூ இஸ் இட்?"

"மஞ்சு, நான் பாலா பேசறேன். மாமாவுக்கு ஆப்பரேஷன் ரெடியாகிக்கிட்டு இருக்கு. ஒரு டோனர் கிடைச்சிருக்கார். உடனே வர்றியா? உன்னைப் பார்க்கணும்ங்கறாரு."

போனை வைத்துவிட்டு "நான் போகணும்" என்றாள். "அண்யாவுக்கு ஆபரேஷன் ஆரம்பிக்கப் போறாங்க."

"நானும் வரட்டுமா?"

மஞ்சரி யோசித்தாள். "ம், சரி வா" என்றாள்.

அவனுக்கு ஏதோ உள்ளுணர்வில் அவர்கள் இருவரும் ஆபரேஷனுக்கு முன் சந்திப்பது நல்லது என்று தோன்றியது.

அந்தப் பெரிய தனியார் ஆஸ்பத்திரியில் வரவேற்புப் பகுதியில் ஃபைபர் நாற்காலி வரிசைகள். பெரும்பாலும் கவலை முக பார்வையாளர்களால் நிரம்பியிருந்தன. புக்ஷாப்,





பொக்கே ஷாப், ஏ.டி.எம். ஏன், குட்டியாக பிள்ளையார் கோயில் கூட இருந்தது. கம்ப்யூட்டர் முனைகளில் ரோஜா நிற ஸாரி அணிந்த பெண்கள் இனிதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். லிஃப்ட்டுக்காகக் காத்திருந்த சிப்பந்திகளும், சக்கர நாற்காலி களில் பச்சை கவுன் அணிந்த நோயாளி களும்... ஏறத்தாழ ஒரு சுறுசுறுப்பான ரயில் நிலையம் போல தோற்றமளித்தது. மஞ்சரி யும் அழகேசனும் காரில் வந்து இறங்க, பரமேஸ்வரன் அவனை விந்தையாகப் பார்த்தார்.

"ஹலோ சார், நாம சந்திச்சிருக்கிறோம்" என்றான்.

"மஞ்சு, ஒரு ஆளுக்குத்தான் அனுமதி. இவனை ஏன் கூட்டிண்டு வந்தம்மா."

"அண்யாவை சந்திக்க. அவங்கள்லாம் எங்கே?"

"வந்துட்டிருக்காங்க. ரூம்லதான் இருக் கார். சீக்கிரம் போ."

அழகேசன், "மஞ்சு, நீ போய்ட்டு வா. நான் காத்திருக்கேன்."

"வா நீ."

"அவருக்கு ஏற்கெனவே ஹார்ட் ப்ராப் ளம். என்னைப் பார்த்து படக்குனு நின்னு போச்சுன்னா?"

"ஒரு நண்பனாத்தான் அறிமுகம் செய்து வைக்கப் போகிறேன்."

ராகவேந்தர் படுத்திருந்த அறையின் முன்பகுதியில் டாக்டர் பாலா அமெரிக்க டாக்டர் பட் உடன் பேசிக்கொண்டிருந் தார்.

உள்ளே சென்றாள்.

"மஞ்சரி வாம்மா! உன்னைப் பாக்காம ஆபரேஷன் இல்லைன்னுட்டேன்."

"அண்யா, எப்படி இருக்கிங்க? நல்ல வேளை இன்னேரம் ஆபரேஷன் துவங்கி யிருப்பாங்கன்னு நினைச்சேன்."

"இல்லைம்மா. இப்ப இல்லைன்னு சொல்லிட்டாங்க."

"ஏன்?"

"என்னவோ மேட்ச் ஆகலைங்கறாங்க. புடைவைக்கு ரவிக்கை மேட்ச் ஆற மாதிரி சொல்றாங்க. பாலாவைக் கேளு."

"என்ன ஆச்சு மாமா?"

"ஒரு டோனர் கிடைச்சார். ஆனா ரத்த க்ரூப், பாடி வெயிட் எதுவும் பொருந்தலை."

"இப்ப என்ன?"

"இன்னொரு டோனருக்கு காத்திருக் கணும்... எல்லா டெஸ்ட்டும் எடுத்தாச்சு... சாயங்காலம் வீட்டுக்குப் போய் காத்தி ருக்கணும்."

"யார் இந்தப் பையன் மஞ்சு?" என்றார் ராகவேந்தர்.

"அண்யா, இது அழகேசன். என்னை... என்னுடைய..."

"ஃப்ரெண்டா?"

"ஆமா ஃப்ரெண்டும்."

"அய்யா எப்படி இருக்கிங்க? உங்களை நேரா சந்திச்சு தொட்டுப் பார்க்கணும்னு எனக்கு ஆசை இருந்துச்சு."

"எதுக்குடா?"

"உங்களைப் பத்தி பத்திரிகைகள்ல, டி.வில நிறைய கேட்டிருக்கேன். நிஜமாவே நீங்க எப்படி இருப்பீங்கன்னு..."

"பெரிய பணக்காரன்ப்பா, ஆனா என்ன பிரயோசனம். சிறகொடிஞ்ச பறவை."

"டாக்டர்ங்க ரிப்பேர் பண்ணிருவாங் கய்யா... புது சிறகு!"

"மஞ்சுவை எப்படித் தெரியும்?"

அவன் மஞ்சுவை பார்க்க "அது வந்து..."

"அழகேசன் இரு! இப்ப ஞாபகம் வருது. நம்ம ரெஸ்டாரண்ட்ல வேலை பார்த்து நீக்கிட்டாங்க."

"சாட்சாத் நானேதான்."

டாக்டர் பாலா, "மாமா, சாயங்காலம் நீங்க வீட்டுக்குப் போயிரலாம். உங்க க்ரூப் ஓ'ல மற்றொரு டோனர் கிடைச்ச எல்லா ஏற்பாடுகளும் செய்ய நாளாகும்..."

"என் க்ரூப்பும் ஓ'தான்." என்றான் அழகேசன்.

"ஆனா நீ சாகலியே!"

"அழகேசா, பாத்தியா, யாராவது விபத்தில் சாவறதுக்கு காத்திருக்கிறேன். என்ன பிழைப்பு இது. ஒருத்தன் செத்துத் தான் இன்னொருத்தன் வாழணும்னா... வேண்டாம்டா, போதும்டா விட்டுடுங் கன்னு..."

அழகேசன், "நீங்க அப்படிச் சொல்லக்

**செட்டு! துட்டு!**

**‘சி**வகாசி’ படத்திற்காக தி.நகர் ரங்கநாதன் தெருவை அப்படியே செட் போட உள்ளார்களாம். செட்டுக்கு துட்டு தர ரங்கநாதன் தெரு வியா பாரிகள் சிலர் முன்வந்துள்ளார் களாம். அந்த நெருக்கடியில் விஜய், அஸின் டூயட் வேறு உண்டாம்!

கூடாது. யாரும் சாவறதுக்காக, நீங்க காத்திருக்கலை. ஒரு தற்செயலான நிகழ்ச்சிக்கு காத்துக்கிட்டிருக்கீங்க. அதுக்குதான் நான் டோனர் கார்டு ரெடியா செய்து வச்சிருக்கேங்க. மேலும் உங்களைப் பிழைக்க வெச்சா இந்தியாவில் எத்தனையோ குடும்பங்கள் பிழைக்கும்."

ராகவேந்தர் அவன் கையைப் பற்றி மஞ்சரியிடம், "பையன் நல்லா பேசறான். இவனுக்கு ஒரு நல்ல வேலை போட்டுக் கொடுக்க ஐயர்கிட்ட சொல்லு. பேசாம இவனைக் கட்டிக்கிடேன். சின்ன வயசில நான் இவனை மாதிரித்தான் இருப்பேன்."



மஞ்சரி அழகேசனை பரவசத்துடன் பார்த்தாள்.

ஸ்ட்ரெச்சர் கொண்டு வரப்பட, உடனே நாகரத்தினம் வந்தார். அழகேசனை அழைத்துச் சென்றார்.

"மஞ்சரி சொல்லிச்சு. அதுக்கு இஷ்டம்னா கட்டிக்கட்டும்னு விட்டுட்டம். அவ பேர்ல கொஞ்சம் ஷேர் இருக்குது. அதை எழுதிக் கொடுத்துட்டா..."

"கொஞ்சம் இல்லைங்க. நியைவே. குடும்பத்தில் உங்க எல்லாரையும்விட அவகிட்டதான். அவ நினைச்சா கம்பெனியை டேக் ஓவர் பண்ணலாம். அதிக ஷேர் இருக்குது."

"சரி சரி, என்ன தீர்மானிச்சா?"

"இப்ப கையெழுத்துப் போட வேண்டாம். அப்புறம் யோசிக்கலாம்னு சொன்னேன்."

"அவ என்ன சொன்னா?"

"அவளையே கேட்டுருங்களேன்."

ராகவேந்தரை அறை மாற்ற படுத்த வாக்கில் லிஃப்டுக்கு எடுத்துச் செல்ல, மஞ்சரி அழகேசனிடம், "நான் வீட்டுக்குப் போறேன். அப்புறம் சந்திக்கலாம்."

"இரு மஞ்சு, ஸார் நீ ஷேர் விஷயமா என்ன தீர்மானிச்சேன்னு கேக்கறார்."

"மாமா, அதுக்கு இப்ப தேவையோ அவசரமோ இல்லை. என்ன அழகி?"

"இன்சாஃப் ஷேர்கள் இப்ப விழுந்துக்கிட்டிருக்கு. உங்கப்பாவுக்கு ஆபரேஷன் பண்ணி குணமாகும்னு தெரிஞ்சா மறுபடி சரசரன்னு ஏறிடும்.. இப்ப மாத்த வேண்டாம்னேன்."

நாகரத்தினத்தின் முகம் சிறுத்தது.

சற்று விலகிப்போய் செல்போனில் யாரையோ கூப்பிட்டு தாழ்ந்த குரலில் பேசினார். "ஜீவன், நாகு பேசறேன். பையன் ஒத்துக்கலை. பார்கவாகிட்ட தகவல் சொல்லிடு. இஜி.எம்மை கூப்பிடச் சொல்லு. பெரியவருக்கு சரியான இதயம் கிடைக்கலை. அடுத்து ஆக வேண்டியதை கவனிக்கணும். அதாண்டா, ப்ளான் 'பி'டா."

**சா**யங்காலம் வரை தந்தையுடன் கூட இருந்துவிட்டு, மஞ்சரி போர்ட்டிகோவுக்கு வந்தாள். கார் நம்பர் சொல்லிக் காத்திருந்தபோது எதிரே ஏ.டி.எம்.முக்குச் சென்று கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டாள். சில புத்தகங்கள் வாங்கினாள். அழகேசனுடன் சேர்ந்ததில் வந்த பழக்கம் அது... 'முதலில் சின்ன புத்தகமாக ஏதாவது வாங்கிப் படி.... இலேசான கதைகள், கட்டுரைகள். உனக்கு நாட்டமிருந்தால் பொயட்ரி... ஏதாவது புத்தகம் வாங்குவதற்கு முதலில் பழக வேண்டும். அப்புறம் அதில் தவறாமல் கையெழுத்துப் போடு. வாங்கின தேதி, இடம். நிச்சயம் மறுபடி அதைப் புரட்டும்போது, 'அடடா வாங்கி ஒரு மாசமாகிவிட்டதே' என்று படிக்க ஆரம்பிப்பாய்' என்பான்.

**கா**ரில் வீடு திரும்பும்போது எதிரே ஒரு ஆம்புலன்ஸ் ஊளையிட்டுக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கிச் சென்றது.

(தொடரும்)

தமிழ் சினிமாவுக்குள் நுழைந்த குறுகிய காலத்துக்குள் 'நச்'சென்று ரசிகர்கள் மனதுள் புகுந்து விட்டவர் பூஜா. இனிய மாலைப் பொழுதொன்றில் அவரிடம் பேசியதிலிருந்து...

**க்ளாமரையும் தாண்டி 'ஜித்தன்'படத்தில் நடிக்கவும் செய்திருக்கிறீர்களே?**

"சும்மா பொம்மையாட்டம் நடிச்சுட்டுப் போயிரலாம்னுதான் நான் தமிழ்



சினிமாவுக்குள்ளேயே நுழைஞ்சேன். ஆனா தமிழ் சினிமாவுல எனக்குக் கிடைச்ச வரவேற்பை விட முடியலை. இங்க ஹீரோயினா நடிக்கறது கௌரவமான விஷயமா இருக்கு. சின்ன வயசுல அப்பா, பாட்டு, டான்ஸ் க்ளாஸுக்கு போக முடியாம தடை போட்டதால என்னால முழுத் தகுதிகளோடு சினிமாவுக்குள் நுழைய முடியலை. 'ஜித்தன்' ரிசல்ட் என்னை

# "கொச்சைப்படுத்தாதீர்க

மேலும் மெருகேத்தியிருக்கு."

**ஆனாலும் தமிழ் சினிமா உங்களை க்ளாமர்**

பாதையிலிருந்து மாற விடாதே?

"அதுதான் கிடையாது. அடுத்தது மாதவனோடு சேர்ந்து 'தம்பி' பண்றேன். அதுல மருந்துக்குக் கூட பூஜாவை நீங்க க்ளாமரா பார்க்க முடியாது. ஸ்ரீலங்காவுக்குப் போயிட்டு சிங்கள மொழியில் ஒரு படம் பண்ணினேன். அதுவும் சுத்த சைவப் படம்தான். வெறும் க்ளாமர் மட்டும் பண்ணினா ஃபீல்டை விட்டு ரெண்டே வருஷத்துல தூக்கி வீசிடுவாங்க.

தமிழ் தெரியாத நடிகைகள் தன்னுடன் நடிப்பது அசௌகரியமாக இருப்பதாக



மாதவன் சொல்கிறாரே?'

"தமிழ் தெரியாத சில நடிகைகளை ஏபிசிடி வரிசையாகச் சொல்லவிட்டு ஷூட் பண்ணுவாங்க. அதுல எப்படியாவது வசனம் கரெக்டா ஃபிட்டாயிடும். நான் அப்படியில்ல. யார்கிட்டயிருந்தோ 'மச்சான்'ங்கிற வார்த்தையை தமிழ்ல முதன் முதலா கத்துக்கிட்டேன். ஏர்போர்ட் அறிவிப்புல 'காலை வணக்கம்'னு அங்கங்கே தமிழ் கத்துக்கிட்டேன். மேடி எப்பொழுதும் தன் கூட நடிக்கிற நடிகை, வசனத்தை சரியா உச்சரிக்கணும்னு பிடிவாதமா இருப்பாரு.

உங்களுக்குத் தெரியுமா, ஒருமுறை மதுரை அமுதசுரபி மன்றம் சார்பா எனக்கு விருது கொடுத்தபோது 'தம்பி' ஷூட்டிங்ல நடிச்சிட்டிருந்த கவிஞர் அறிவுமதிகிட்ட விருந்து என்ன பேசணும்னு ஸ்கிரிப்ட் வாங்கிட்டு போன நான், அங்க போய், சரி சொந்தமா பேசலாம்னு நிறைய நல்லது செய்யும் தலைவர், நீளமான(!) ஆயுளோடு இருக்கணும்ங்கிறதுக்குப் பதிலா, தலைவர் நீளமான உயிரோடு இருக்கணும்னு உளர 'ஹோ'ன்னு கூட்டம் என்னைப் பார்த்து சிரிச்சுது."

ஒரு ஹீரோ, தன் படத்தின் ஹீரோயினை ரெகமண்ட் பண்ணலாமா?

"ஏன் கூடாது? ஆனால்



"...தீ!"

– அலறுகிறார் பூஜா



"பொண்ணு F.M.ல வேலை பார்க்கறதா சொல்றீங்க... வாயைத் திறக்க மாட்டேங்கறாளே?"

"அவ ஷிப்ட் மதியத்துக்கு மேலதான் துவங்குது."

- அம்பை தேவா

இதுவரை நான் நடித்த தமிழ்ப் படங்களிலெல்லாம் ஹீரோக்கள்தான் ரெகமண்ட் செய்தார்களா என்று கேட்காதீங்க. அது எனக்குத் தெரியாது."

**உங்கள் நடிப்புக்கு நீங்கள் தரும் மதிப்பெண்?**

"இன்னமும் நான் ஜித்தன் மட்டுமல்ல, என்னோட எந்தப் படத்தையும் பார்த்ததில்லை. அதெப்படி, நானே என்னை ஸ்கிரீன்ல பார்த்தா வெட்கம் வராதா?! தியேட்டருக்குப் போனா என் ஃப்ரெண்ட்ஸெல்லாம் செமத்தியா கிண்டல் பண்றதால, என் படத்தை ஃபுல்லா பார்த்ததே கிடையாது. அதனால மார்க்குக்கெல்லாம் நோ சான்ஸ்."

**எல்லோரையும் 'அண்ணா' என்று அழைக்கிறீர்களாமே?**

"ஆமா. வேறெப்படி அம்மா, அப்பான்னா கூப்பிட முடியும்? நான் எல்லோரையும் 'அண்ணா'ன்னு கூப்பிட்டா, என்னை யாரும் லவ் பண்ணக் கூடாதுன்னு இப்படி சென்டிமெண்டா தாக்குறியான்னு கேட்கறாங்க. 'சார்'னு கூப்பிடறது தவறுங்கிறதாலதான் அப்படி கூப்பிட்டேன். இப்ப எந்தத் தொல்லையும் வேண்டாம்னு 'ஜி' போட்டுக் கூப்பிடறேன்."

**நீங்களும் ஷாலினியின் சகோதரர் ரிச்சர்ட்டும் சர்ச்சில் அமர்ந்துகொண்டு காதலிப்பதாக...**

*(இடைமறிக்கிறார்)* "அந்தக் கிசுகிசுவுக்கு அவார்ட்தான் கொடுக்கணும். ரக்ஷாபந்தன் அன்னைக்கு ரிச்சர்ட் கையில ராக்கி கட்டியிருக்கேன். பிறகு நான் எப்படி அவரை லவ் பண்ண முடியும்? ரிச்சர்ட் அப்பா என்னை அவரது மகளாகத்தான் பார்க்கிறார். ரிச்சர்ட்டின் நட்பு கிடைத்ததால் அவரது குடும்பத்தின் சிநேகமும் எனக்குக் கிடைத்தது. நானும் ரிச்சர்ட்டும் பெசன்ட் நகர் சர்ச்சில் சந்தித்துக்கொண்டு காதலிக்கிறோமாம். சென்னை பெசன்ட் நகரே எனக்கு சரியாகத் தெரியாது. இதில் சர்ச், காதல் எல்லாமே அபத்தம். இந்தக் கிசுகிசுவில் கடவுளையும் இழுத்ததுதான் கொடுமையான விஷயம். என்னை ஒருவன் கொலை செய்ய வந்தால் கூட தப்பி ஓடாமல் அந்த இடத்தில் கடவுளை பிரார்த்திப்பேன். எங்கள் நட்பை இப்படி கொச்சைப்படுத்தியிருக்க வேண்டாம்."

**இன்றைய தேதியில் நடிகைகள் ஓட்டலில் தங்குவது ஆபத்தாக உள்ளதே?**

"தொழில்நுட்பம் வளர வளர, அது பெண்களை மேலும் இழிவுபடுத்தும் விஷயமாகவே இருக்கிறது. என்னைச் சுற்றியிருப்பவர்கள் என்ன பேசுகிறார்கள், எப்படி நடந்து கொள்கிறார்கள் என 'உளவாளி' மாதிரி இந்தக் காலத்தில் அச்சத்துடன் இருக்க வேண்டியுள்ளது. நல்லவேளை, நான் தங்கும் ஸ்டார் ஹோட்டல்களில் இதுபோன்ற பாதிப்புகள் கிடையாது. நானும் நம்பிக்கையாக இருக்கிறேன்."

**நடிகைகளுக்குப் பணம்தான் வாழ்க்கையா?**

"பணம் இருந்தால்தான் மதிப்பு, மரியாதை. இருந்தாலும், உலகில் எவ்வளவோ இதர சந்தோஷங்கள் இருக்கு. ஒருமுறை என் வீட்டு வாசலில் பிச்சை கேட்ட முதியவருக்குப் பணம் தரமுடியலைன்னு இன்னமும் மனசு உறுத்துது. என் நண்பர் ஒருவர் திருமணமான பிறகு குழந்தை எதுவும் பெற்றுக்கொள்ளாமல் காப்பகத்தில் ஒரு குழந்தையைத் தத்தெடுத்தது என்னை உருக வைச்சிருச்சு. இப்ப சொல்லுங்க, பணத்தைத் தாண்டியும் எவ்வளவோ விஷயங்கள் இருக்குதானே."

• ச.ந.கண்ணன்

# சிரி...சிரி...!

"உன் மாமியார் ரொம்ப நாகரிகமானவங்களா...? ஸ்பூனால சாப்பிடறாங்களே...?"

"அதெல்லாம் ஒண்ணுமில்ல! நான் செய்த சமையலை கையால தொடமாட்டேன்னு சபதம் போட்டிருக்காங்க, அதான்."

– சீர்காழி வி.ரேவதி



"உங்க மாமியாரோட ஹெல்த்தை பத்தி இருபத்து நாலு மணி நேரம் கழிச்சு தான் சொல்ல முடியும்!"

"அவசரமில்லை. இருபத்து நாலு மாசம் கழிச்சுக்கூட சொல்லுங்க டாக்டர்!"

– கொங்கணாபுரம் வே. செந்தில்





"என்ன சர்வர், வடை 'பிள்ளையார் சுழி' ஷேப்ல இருக்கு."

"புது மாஸ்டர் இன்னைக்குத் தான் முதன் முதலா வேலையை ஆரம்பிச்சிருக்கார்."

– க.கமல்



"எந்த ஜாதகத்தைக் காட்டினாலும் நம்ம பிள்ளைக்குப் பொருந்தலன்னு சொல்லிடறாரே இந்த ஜோசியர்! என்ன செய்யறது?"

"ஜோசியர் நமக்குப் பொருந்தலன்னு வேற ஜோசியரைப் பார்க்க வேண்டியது தான்!"

– பம்மல் நாகராஜன்

# நாலு ரூபாய் நிம்மதி!

விஜயாலயன்

**பொ**ய்கையூர் கிராமத்தில் மாகாளியம்மன் கோயில் திருவிழா ஆரம்பமாகியிருந்தது.

ஒரு வாரத் திருவிழாவில் ஐந்து நாட்கள் முடிந்து போயிருந்தன. டவுனிலிருக்கும் தம்பி நந்தகுமார் இந்த வருடமும் திருவிழாவுக்கு வராதது தேவராஜுக்கு வருத்தமளித்தது. ஆனாலும் எந்நேரமும் அவன் வரலாம் என்று உள்ளுக்குள் ஒரு நம்பிக்கை. வேலை வேலை என்று எந்நேரமுமா அலைவது? கடவுளுக்காக ஒரு இரண்டு நாள் ஒதுக்கக் கூடாதா? அவரின் எண்ணம் வீண்போகவில்லை. நந்தகுமார் மனைவி, குழந்தையுடன் வந்துவிட்டான்.

"இப்பவாவது வந்தியே? நாளைக்குத்தான் தேர்த் திருவிழா..." ஆறுதல் பட்டுக் கொண்டார் செல்வராஜ்.

**ம**றுநாள் மதியம் இரண்டு மணிக்கு மேல் வீட்டைப் பூட்டிக் கொண்டு தத்தம் மனைவி, குழந்தைகளோடு கோயிலுக்குப் புறப்பட்டனர் தேவராஜும் நந்தகுமாரும். தேர்க்கடைகள் கோயிலுக்கு இருபுறமும் போடப்பட்டு நீளமாய் கோயில் வரை நீண்டு போனது. வளையல் கடைகள். பொம்மைக் கடைகள். இளநீர் கடைகள். பூக்கடை பலகாரக் கடை என்று விதவிதமான கடைகள். ராட்டினங்கள்.

நந்தகுமார் மனைவி விமலாதான் கேட்டாள்.

"என்னங்க, வளையல் வாங்கணும்?"

பாக்கெட்டிலிருந்து இருநூறு ரூபாயை எடுத்து நீட்டினான்.

"நாங்க கோயில்ல இருக்கோம். வாங்கிட்டு அங்க வந்திடுங்க..."

"சரிங்க...!" என்றவள், குழந்தை ரஞ்சித்தையும் தூக்கிக்கொண்டு, செல்வராஜின் மகள்களான தேன்மொழி, ராகசுதா இருவரையும் கூட்டிக்கொண்டு கூட்டத்தில் நுழைந்து வளையல் கடையை நெருங்கினாள்.

தேவராஜின் மனைவி நீலவேணி உட்பட எல்லோருக்கும் இரண்டு ஜோடி வளையல்கள். தேன்மொழி, ராகசுதாவுக்கு பாசி வகையறாக்கள். எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு பணத்தை நீட்டினாள். கடைக்காரர் பேக் செய்து கொடுத்த பொட்டலங்களை நீட்டியவாறே,

"தேன்மொழி! ரஞ்சித் எங்கே...?" என்றாள் விமலா.

"என்ன சித்தி, இப்படிக் கேக்கறீங்க? நீங்கதானே அவனை வெச்சிருந்தீங்க...?"

விமலாவுக்கு மனசு திக்கென்றது.

'வளையல்... பாசி வாங்கும் சுவாரஸ்யத்தில் ரஞ்சித்தை கீழே இறக்கி விட்டேனே...?'

சுற்றும் முற்றும் பார்த்தாள்.

ரஞ்சித்தைக் காணவில்லை.

ஆவேசமான ஒரு பயம் விமலாவின் மனசுக்குள் புகுந்தது.

தேன்மொழி கோயிலுக்குப் போய் தேவராஜ், நந்தகுமார், நீலவேணியை கூட்டிக் கொண்டு வந்தாள்.

எல்லோரும் ஆளுக்கொரு



சிறுகதை

திசையில் ரஞ்சித்தைத் தேட ஆரம்பித்தார்கள்.

**கா**ல் மிதி பம்ப்பில் காற்றை பலூனில் பிடித்து அதை குரங்காய்... வாத்தாய்... குருவியாய் மாற்றிக் கொண்டிருந்தான் சிங்கமுத்து. மூங்கில் குச்சியில் கட்டப்பட்டிருந்த பலூன்களை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான் குழந்தை ரஞ்சித்.

''ஏண்டா... உனக்கு பலூன் வேணுமா?'' என்றான் சிங்கமுத்து.

''ஆமா...''

''காசு வெச்சிருக்கியா...?''

உதட்டைப் பிதுக்கினான் ரஞ்சித்.

''காசு இல்லாம பலூன் எப்படிடா கிடைக்கும்...?''

''எனக்கு பலூன் வேணும்...?''

''சரி... என்ன வேணும்...?''

''கொரங்கு...''

மிதி பம்ப்பில் காற்றை பலூனில் பிடித்து குரங்காய் மாற்றி... வாய் வைத்து.. நூல் கட்டி ரஞ்சித்திடம் நீட்டினான். சந்தோஷத்தில் பலூனை வாங்கிக்கொண்டு சிரித்தான் ரஞ்சித். அப்பொழுதுதான் அம்மாவின் ஞாபகம் வந்தது. சுற்றும் முற்றும் தேடினான். அம்மாவைக் காணவில்லை. அடுத்த விநாடி, அழ ஆரம்பித்தான்.

''அம்... ஆ...ஆ...ஆ!''

''டேய் தம்பி...! ஏண்டா அழுறே..?''

''அம்....மா ஆ...ஆ...ஆ...!''

சிங்கமுத்து புரிந்து கொண்டான். பையன் அம்மாவிடமிருந்து நழுவி விட்டான். ஒரு நிமிடம் தன்

வியாபாரத்தை நிறுத்தி விட்டு, ரஞ்சித்தைத் தூக்கிக் கொண்டான்.

"அழாதடா... உங்கம்மா வருவாங்க..." என்று சமாதானம் சொன்ன சிங்கமுத்துவின் கண்கள் ரஞ்சித்தின் கழுத்துக்குத் தாவியது. குழந்தையின் கழுத்தில் தங்கச் சங்கிலி!

குறைந்த பட்சம் இரண்டு பவுனுக்குக் குறையாது.

சுற்றும் முற்றும் பார்த்தான். சட்டென்று குழந்தையின் கழுத்திலிருந்த செயினை உருவி தன் பாக்கெட்டில் போட்டுக் கொண்டான்.

"அழாதடா... உம் பேரென்ன...?"

"ர... ர... ரஞ்சித்...!"

"அம்மா பேரு...?"

"வி... வி... விம... லா...!"

"அப்பா பேரு...?"

"ந... ந... நந்... தா ஆ!"

"அழாதே... உங்கம்மா இப்ப வந்துரு வாங்க..." சிங்கமுத்து ரஞ்சித்தை தட்டிக் கொடுத்து அழுகையை நிறுத்த முயன்று கொண்டிருந்தான்.

**தே**டிக் கொண்டு வந்த தேன்மொழி கத்தினாள்.

"சித்தீ..! அங்க பாருங்க. பலூன் காரன்கிட்டே ரஞ்சித் இருக்கான்...!"

இருவரும் அவனை நெருங்கினார்கள்.

ரஞ்சித் அழுதபடி விமலாவிடம் தாவினான்.

"இத பாரும்மா... கொஞ்சம் பொறுங்க...?"

விமலா பதறினாள்.

"இவனோட அம்மா நான்...!"

"உங்க பேரு...?"

"விமலா..!"

"இவனோட அப்பா பேரு."

"நந்தா!"

பலூன்காரன் சிங்கமுத்து சமாதானமாகி குழந்தையை அவனிடம் நீட்டினான்.

"கூட்டத்துல ஜாக்கிரதையா இருக்க வேண்டாமா? பாத்து கூட்டிட்டுப் போங்கம்மா!"

**பொ**ய்கையூர் கிராமத்திலிருந்து இரவோடு இரவாக டவுனுக்குத் திரும்பி விட்டார்கள். விமலா காலையில் எழுந்து வேலைகள் முடித்து ரஞ்சித்தை எழுப்பி குளிக்க வைக்க சட்டையைக் கழற்றியவள், அதிர்ந்தாள்...

கழுத்தில் ரஞ்சித்தின் இரண்டு பவுன் செயினைக் காணோம்! இவன் காணாமல் போன பதற்றத்தில் இந்த இரண்டு பவுன் சங்கிலியை மறந்தே போய்விட்டேன். இதை அந்த பலூன்காரன்தான் எடுத்திருப்பான்.

"என்னங்க..?"

"என்ன விமலா?"

"ரஞ்சித்தோட செயினைக் காணோம்ங்க. அந்த பலூன்காரன்தான்

## வலை!

ப்ரெண்ட்ஸ் படத் தயாரிப்பாளரான அப்பச்சனுக்காக விரைவில் படம் செய்யவிருக்கிறார் விஜய். மகனுக்காக நல்ல கதையைத் தேடி வலை வீசத் தொடங்கியுள்ளார் அப்பா எஸ்.ஏ. சந்திரசேகர்.

எடுத்திருப்பான்.''

"இப்பப் போய் அவனை எங்க தேடறது..?"

"நல்லவன் மாதிரி நியாயம் பேசினான். திருட்டு ராஸ்கல். வாங்க போலீசுக்குப் போகலாம்..."

இருவரும் கிளம்பி வாசலுக்கு வந்த அதே நேரம், படியேறி வந்து கொண்டிருந்தான் பலூன்காரன் சிங்கமுத்து.

"வாய்யா, உன்னைத்தான் தேடிட்டு கிளம்பினோம். நல்லவன் மாதிரி நடிச்சு, குழந்தை கழுத்திலிருந்த செயினை உருவிட்டியே" - படபடவென்று வெடித்தாள் விமலா.



**கவர்ச்சி!**

**அர்ஜுனுடன் 'சின்னா' படத்தில் தாராளமாக நடித்திருக்கும் சினேகா, தன்னால் அதிகமாக கவர்ச்சியாக நடிக்க முடியாது என்று சொல்லி ஒரு இந்திப்பட வாய்ப்பை நிராகரித்துள்ளார்.**

''அப்படிப் பேசாதீங்கம்மா... உங்க கொழந்த கழுத்துல செயின் இருக்கறதைப் பார்த்துட்டு அதுக்கு ஆசைப்பட்டு, யாராவது கொழந்தையைக் கடத்திட்டுப் போயி கொன்னு போடு வாங்க. அது மட்டுமில்லீங்க. கொழந்த அழறதைப் பாத்துட்டு நகைக்காக எங் கொழந்தைன்னு பொய் சொல்லி எடுத்துட்டுப் போயிடுவாங்க. அதனாலதாங்க நகையைக் கழட்டி பாக்கெட்டுல போட்டேன். ஆனா நீங்க அழுதுட்டே வந்த பதற்றத்துல நான் நகையைக் கொடுக்க மறந்துட்டேங்க. நீங்க போன பிறகுதான் ஞாபகம் வந்துச்சு. கோயில் பூரா தேடினேன். நீங்க கிடைக்கல. உங்க கூட வந்த அந்தப் பொண்ணு தேன்மொழி மறுபடியும் கோயிலுக்கு வந்துச்சு. அதுகிட்டே உங்க அட்ரசை விசாரிச்சுட்டு வந்தேங்க. இந்தாங்க!" என்று அந்த இரண்டு பவுன் தங்க செயினை நீட்டினான்.

இவனைப் போய் தவறாக நினைத்து விட்டோமே என்று வருத்தப்பட்ட விமலா... "தப்பா பேசிட்டேன். மனசுல எதையும் வச்சுக்காதீங்க" என்றாள்.

நந்தகுமார், பர்சிலிருந்து பணம் எடுத்து, "இதை வெச்சுக்கங்க" என்றான்.

"வேண்டாங்க... இந்தப் பணத்துக்காக நான் செயினை கொண்டு வர்ல. இது நீங்க கஷ்டப்பட்டு சம்பாதிச்ச பொருள். நான் கஷ்டப்படாம எடுத்து வெச்ச பொருள். இதை நான் உங்ககிட்டே கொடுக்கலேன்னா அது திருட்டு. அந்த திருட்டு என் மனசை அழுக்காக்கிடும். ஆசை வளந்திடும். சின்னச் சின்ன திருட்டா ஆரம்பமாகி, பெரிய திருடனாயிடுவேன். என் மனசுல நிம்மதி போயிடும். வேண்டாங்க."

"இல்லப்பா. என் திருப்திக்காக நீ ஏதாவது வாங்கித்தான் ஆகணும்."

"சரிங்க. அன்னைக்கு உங்க மகனுக்கு குரங்கு பலூன் செய்து கொடுத்தேன். அதோட விலை நாலு ரூபாய். அந்த நாலு ரூபா மட்டும் கொடுங்க."

நூறு ரூபாயை நீட்டினான் நந்தகுமார்.

"என்கிட்டே சில்லறை இல்லங்க."

"பரவாயில்ல வெச்சுக்க!"

"வேண்டாங்க. நாலு ரூபா மட்டும் குடுங்க."

பாக்கெட்டிலிருந்து பத்து ரூபாயை நீட்டினான். ஆறு ரூபாய் சில்லறை கொடுத்து விட்டுப் புறப்பட்டான் சிங்கமுத்து. வெளியே மழை பெய்ய ஆரம்பித்தது. ●







மூல கணபதி சன்னதி, வள்ளி தெய்வயானை சமேதாய ஸ்ரீசுப்பிரமண்யர் சன்னதி, நவக்கிரக மண்டபம், காசிலிங்க சன்னதி, நாகர் சன்னதி, பைரவர் சன்னதி, சூரியன் மற்றும் சந்திரனுக்கான சன்னதிகள் என்று கட்டப்பட்டு, புதிதாக மதில் சுவரும் எழுப்பப்பட்டு நிறைவுடன் காட்சியளிக்கிறது. கடந்த 2002ம் ஆண்டில் கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

# பூலோக கைலாசம்!

**கோயில் பழசு கோலம் புதுசு**

பூஜைகள் இன்றி, இடிந்து சிதைந்து குட்டிச்சுவராய்க் கிடந்த பழம்பெரும் கோயிலான விருதுநகர் மாவட்டம், சாத்தூர் இருக்கன்குடி கைலாசநாதர் கோயில், இன்று பார்க்கும் யாவரும் வியப்படையும் வகையில் மறுமலர்ச்சி பெற்று ஜொலிக்கிறது.

சிதம்பரம் நடராஜர் கோயிலுக்கு அடுத்தபடியாக இத்திருக்கோயிலில் தான், அருள்மிகு ஸ்ரீகைலாசநாதர்-காமாட்சியம்மன் திருவருளால், ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் கும்ப பூஜை, யாக பூஜை, பதினாறு வகை தீபாராதனைகள், அபிஷேகம், அலங்காரம் அன்னதானம் என்று வெகு சிறப்பாக நடந்து வருகிறது.

மண்ணாலும், முட்புதர்களாலும் மூடப்பட்டுக் கிடந்த இத்திருக்கோயில், இன்றைக்கு புதுப்பிக்கப்பட்டு, கன்னி

பிரதோஷ நாட்களிலும், மாத சிவராத்திரி நாட்களிலும் பக்தர்கள் கூட்டம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. ஒவ்வொரு ஆண்டும், மாசி மகாசிவராத்திரி அன்று மாலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரை, ஆகம முறைப்படி நடைபெறும் நான்கு கால அபிஷேக அலங்கார சோடஷ தீபாராதனைகளைக் காணக் கண்கோடி வேண்டும்.

பூஜை நின்று போன கோயிலுக்கு பூஜை ஏற்படுத்துதல், 'அஸ்வமேத யாகம் செய்த பலனைத் தரும்' என்பார்கள். ஆயிரம் ஆண்டுகள் பழைமையான, பாழடைந்த இத்திருக்கோயிலைப் புதுப்பித்து, நித்ய பூஜைகளும் மற்றும் சகலவிதமான திருப்பணிகளும் செய்து, இக்கோயிலை 'பூலோக கைலாசம்' ஆக்கிய பெருமை இருக்கன்குடி ஸ்ரீகைலாசநாதர் சேவா சங்கத்துக்கு உரியது.

**- ராம்மோகன், விருதுநகர்**

வெளியே
எவரேனும் தூங்குகிறார்களா
ஓவென ஓலமிடுகிறது காற்று

உள்ளே
எவரேனும் விழித்திருக்கிறார்களா
சன்னமாக ஒளியை உமிழ்கிறது
விடி விளக்கு

வேப்பம் பூவின்
வாசம் சேர்த்து

தடதடத்த வண்ணம்
ஓடும் லாரியின்
ஓசையைச் சுமந்து செல்லும்

காற்றின் அதிர்வுடன்
ஒத்திசைந்து ஆடும்
திரைச் சீலை

எதனைக் காட்டலாம்
எதனை மறைக்கலாம்
என்னும் பரிதவிப்புடன்.

# ஒத்திசைவு

மதுமிதா



# "தவறுகளே நம்மைத் தோற்கடிக்கும்!"

'இணைந்த கைகள்' படம் மூலம் உச்சத்துக்குச் சென்றவர் நடிகர் அருண் பாண்டியன். அவரது சமீபத்திய படங்கள் தோல்வியைத் தழுவினாலும், அதற்காக வருத்தப்பட்டு முடங்கிவிடாமல், தமது பாதையை ஸ்போர்ட்ஸ், திரைப்பட விநியோகம் என்று மாற்றிக்கொண்டு விட்டார். பில்லியர்ட்ஸ் அன்ட் ஸ்னூக்கர் ஃபெடரேஷன் ஆஃப் இந்தியா அமைப்பின் வைஸ் பிரசிடென்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள முதல் தமிழர். அவரிடம் பேசினோம்.

**சினிமாவுக்கு சம்பந்தமேயில்லாத இந்தத் துறையில் எப்படி இந்த அளவுக்கு முன்னேற முடிந்தது?**

"எனது நண்பர் ராவ் வீட்டில் அவ்வப்போது பில்லியர்ட்ஸ் விளையாடுவது உண்டு. ஆர்வம் அதிகரிக்க, படிப்படியாக முன்னேறி, இப்போது BSFIயின் துணைத் தலைவராகிவிட்டேன். இதற்கு முன்னர் தமிழ் மாநிலத் தலைவராகவும் பணியாற்றியுள்ளேன்."

**பில்லியர்ட்ஸ் - ஸ்னூக்கர் என்ன வித்தியாசம்?**

"பில்லியர்ட்ஸில் சிவப்பு - மஞ்சள் - வெள்ளை என மூன்று பந்துகள் மட்டும் உண்டு. ஆனால் ஸ்னூக்கரில் இருபத்தியொரு பந்துகள். ஆட்டமுறையில் அதிக வித்தியாசம் ஏதுமிருக்காது. சுருக்கமாகச் சொன்னால், கிரிக்கெட்டில் ஒருநாள் போட்டி போன்றது ஸ்னூக்கர். டெஸ்ட் போட்டி போன்றது பில்லியர்ட்ஸ்."

**கிளப்களுக்கு வரும் ஹைடெக் மக்களுக்கான விளையாட்டுகள் என்கிறார்களே...?**

"அந்த நிலையை மாற்றி டென்னிஸ் போன்ற பிரபலமான விளையாட்டாக மாற்ற BSFI போன்ற அமைப்புகள் செயல்பட்டு வருகின்றன. தேசிய சாம்பியன்ஷிப் போட்டிகள், பயிற்சி முகாம்கள் உள்ளிட்டவை நடத்தப்பட்டு வருகின்றன. இதனை மேம்படுத்த, அரசிடமும் உதவிகள் கோரப்பட்டு வருகின்றன."

**இதில் பெண்கள் விளையாடுகிறார்களா?**

"நிறையப் பேர் ஆர்வத்துடன் விளையாடுகிறார்கள். வித்யா பிள்ளை என்கிற பெண்தான் இப்போது தேசிய சாம்பியனாக உள்ளார். இவரைத்தான் அடுத்து உலக சாம்பியன்ஷிப் போட்டிக்கு BSFI அனுப்ப உள்ளது."

**இந்த விளையாட்டுக்கான தகுதிகள்...?**

"இந்த கேமில் எதிராளி நம்மை தோற்கடிக்க முடியாது. நாம் செய்யும் தவறுகள்தான் நம்மைத் தோற்கடிக்கும். ஆகவே நிறைய பொறுமை, கூடுதல் கவனம், சீரான திட்டமிடல் இவைதான் அடிப்படைத் தகுதிகள்."

**சினிமாவை மறந்துட்டீங்களா?**

"இல்லவே இல்லை. 'ஐங்கரன் இன்டர்நேஷனல் ஃபிலிம்ஸ்' என்கிற நிறுவனத்துக்கு நிர்வாக இயக்குனராகப் பொறுப்பேற்றுள்ளேன். இதன் மூலமாகத்தான் எல்லாப் படங்களுமே வெளிநாடுகளுக்கு விநியோகம் ஆகின்றன. இது மிகப்பெரிய பொறுப்பு."

**- கலை**

# நீங்கள் உதவினால் இவர்கள் வாழலாம்...,

## வருடத்தில் ஒரு நாள் உணவு வழங்கி உதவி செய்யுங்கள்.



கோயம்புத்தூர், சத்தி ரோடு, குரும்பபாளையத்தில் இயங்கி வருகிறது 'தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி'. எழுந்து நிற்கமுடியாத, நடக்கமுடியாத, பேசும் சக்தியற்ற, மனவளர்ச்சி குன்றிய ஆதரவற்ற சிறுவர், சிறுமியர்களை கொண்டுள்ளது இந்த இல்லம். நீங்களும் உங்கள் பிறந்த நாள், பண்டிகைநாள், திருமணநாள், பெற்றோரின் நினைவு நாட்களில் அவர்களை நினைவுகூறும் விதமாக 'ஒரு நாள்' உணவு வழங்கி உதவி செய்யுங்கள். பொருள் உதவி செய்தோ அல்லது மாதாமாதம் ஒரு சிறு தொகையை பள்ளியின் பெயரில், வங்கி டிராப்ட் / மணியார்டர் மூலம் அனுப்பலாம். இந்த இல்லத்தினை பார்வையிட்டும் உதவி செய்யலாம்.



# The United Physically Handicapped School

(an Institution for orphaned disabled children)

**96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641 107.**
**Tamil Nadu. INDIA Phone : 91-422-2667578, 2667636. www.unitedhandicapped.org**

"ஊனமுற்றோர்களுக்கு செய்யும் தொண்டு! இறைவனுக்கு செய்யும் தொண்டு!!"

* Donations are Tax exempt

மெரினா கடற்கரை... அலுவல் விஷயமாக அந்தப் பக்கம் விரைந்து கொண்டிருக்கிறேன்... யதேச்சையாக என் கண்கள் கடற்கரை பக்கம் திரும்புகின்றன... புரண்டு வரும் அலைகளில் கால் நனைத்தபடி ஜோடி ஜோடியாக ஆண்களும் பெண்களும் தெரிகிறார்கள். மணலில் கோலம் வரைந்த படி காதலிகள் குனிந்திருக்க... உலகத்தையே வென்றுவிட்ட களிப்பில் காதலன்கள் அவர்களின் கடைக்கண் அசைவுக்காகக் காத்திருக்கிறார்கள்... வெயிலுக்குக் குடை பிடித்த படி சில ஜோடிகள்... படகு மறைவில் ஒண்டியபடி சிலர்... சுண்டல் வாங்கியபடி கொஞ்சம் பேர்... பூக்காரிகளிடம் பேரம் பேசியபடி...என்று கடற்கரை முழுக்கப் பரந்து விரிந்திருக்கிறார்கள் காதலர்கள். 'காதல்' என்று மனதுக்குள் உச்சரித்தபடி கண்களை மூடிக் கொள்கிறேன். வண்ணமயமாய் விரிகிறது என் கல்லூரிக் காலம்.

## "நரம்பை அறுத்துக்கொண்டு தற்கொலைக்கு முயன்றபோது..."

காதல் மீது எனக்குக் காதலில்லாத நேரங்கள் அவை. எந்தப் பெண்ணும் என்னை வசிகரித்ததில்லை. வசிகரிக்க வேண்டுமென்று நான் விரும்பியதுமில்லை. ஆனால், காதல் ஒரு மனிதனின் உலகத்தில் எத்தகைய மாற்றங்களை ஏற்படுத்தும் என்பதை வெகு சீக்கிரமே

# காதலுக்கு

உணர்ந்து கொண்டேன்.

எங்கள் பக்கத்து வீட்டில் எனக்கொரு நண்பன் இருந்தான். இருவருமே ஒளிவு மறைவில்லாதவர்கள். அவனுக்கு ஒரு தோழி. எப்பொழுதும் அந்தப் பெண்ணைப் பற்றித்தான் பெருவாரியான நேரங்கள் என்னிடம் பேசிக் கொண்டிருப்பான். 'அவளை விரும்பு



## காதல் சிறகுகள்–6

கிறாயா?' என்று கேட்டதற்கு 'ஆம்' என்றான். கூடவே 'ஆனால்' என்று கொக்கி போட்டான். 'என்ன' என்றேன். 'அவள் என்னை விரும்பவில்லை. நண்பனாகத்தான் பார்க்கிறாள்' என்றான். காதலில் நம்பிக்கையில்லாத எனக்கு இந்த பதில் ஒன்றே போதுமானதாயிருந்தது திருப்பித் தாக்க...

'படிக்கிற காலத்துல காதல் கத்திரிக்காயெல்லாம் தேவையில்லாதது. அவதான் உன்னை ஃப்ரெண்டா நினைக்கிறாளே... நீயும் அப்படியே நினைச்சிட்டுப் போ...''

"முடியாது. அவ இல்லைன்னா என்னால வாழ முடியாது. எனக்குள்ள இருக்குற ஒவ்வொரு அணுவும் அவ பேரை சொல்லித்தான் உயிர் வாழுது.''

''இப்படி டயலாக் அடிக்கிறதை மொதல்ல நிறுத்தி, உருப்படற வழியப் பாரு.''

"கிண்டல் பண்ணாத. காதல் உணர்வு பூர்வமான விஷயம். நாங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிட்டு சந்தோஷமா வாழத்தான் போறோம். அதை நீ பார்க்கத்தான் போற.''

"மொதல்ல அவகிட்ட உன் காதலைச் சொல்லு... மத்ததையெல்லாம் அப்புறம் பார்க்கலாம்.''

''இன்னைக்கே சொல்றேண்டா... நாளைக்கு ரெண்டு பேரும் காதலர்களா வந்து உன்னைச் சந்திக்கிறோம்.''

போய்விட்டான். இப்படி உருப்படாமல் போகிறானே என்று என்னால் வருத்தப்படத்தான் முடிந்தது.

**ம**றுநாள் முழுக்க அவன் வரவில்லை. அந்தப் பெண்ணிடம் காதலைச் சொன்னானா, இல்லையா என்று தெரியவில்லை. சரி, நாமே போய்ப்





பார்க்கலாம் என்று போனால் அதிர்ச்சித் தகவல் என் காதில் விழுந்தது.

நரம்பை அறுத்துக் கொண்டு தற்கொலைக்கு முயற்சித்திருக்கிறான். நல்லவேளையாக மருத்துவ மனையில் சேர்த்து காப் பாற்றிவிட்டிருக்கிறார்கள்.

என்னைப் பார்த்ததும் அழுதான். அருகில் யாரு மில்லாத போது,

''என்னாச் சுடா?'' என் றேன்.

"என் காதலை அவகிட்ட சொன் னேன்டா. ஏத் துக்க மாட் டேன்னுட்டா. 'நாம நல்ல நண்பர் களா இருப்போம்'னு சொல்லிட்டா. என் னால தாங்க முடிய லடா. உயிர் வாழவே பிடிக்கல. அதான் இப்படி செஞ்சுக்கிட் டேன்."

"நீ செத்துட்டா எல் லாம் சரியாய்டுமா? அவ உன்னைக் காதலிச்சிரு வாளா? அப்படி காதலிச்சா அதுதான் உண்மையான காத லாய்டுமா? இரக்கப்பட்டு வர்றதுக்குப் பேரு காதல் இல்லை. காதல் பிச்சை கேட்காது. ஆனா அவமேல தப்பில்ல. உன்னை நண் பனா பாவிச்சிருக்கா. காதலிக்க மறுத்துட்டா. தப்பையெல்லாம் நீயே செஞ்சுட்டு இன்னொரு தப்பும் செய்யப் பார்த் திருக்க. இனி இந்த மாதிரி இருக்காதே... திருந்துடா."

ஆனால் அவன் அவளை மறக்கவே இல்லை. நன்றாகப் படித்து எப் படியோ வாழ்வில் வந்தி ருக்க வேண்டியவன், ஒரு சராசரியாய்ப் போய்விட்டதில் காதலுக்குப் பெரும் பங்குண்டு. அதனால் 'காதல்' என்னுள் இன்னும் அழுத்தமாகக் காயம்பட்டுப் போனது. ஆனால் அதே காதலை நான் மதிக்கிற மாதிரியான ஒரு சம்பவமும் நடந்தது.

அந்தக் காதலர்கள்



எனக்கு நன்கு அறி முகமானவர்கள்தான். இருவருமே ஒருவரையொருவர் உண்மையாய் விரும்பினார்கள். வெவ்வேறு ஜாதியைச் சேர்ந்தவர்கள். எதிர்ப்புக்குக் கேட்க வேண்டுமா? இரண்டு குடும்பமும் ஒப்புக் கொள்ளவே இல்லை. நான்கூட எதிர்பார்த்தேன். 'காதல் சும்மா... எதிர்ப்பு வர்ற வரைக்கும்தான்... அப்புறம் பிரிஞ் சுடுவாங்க... ஜாதிப் பிரச்னை வேற... நிச்சயம் காலிதான்' என்று. ஆனால், என் எண்ணங்களை தவிடுபொடியாக்கி

அந்தக் காதலர்கள் காத்திருந்தார்கள். இரு குடும்பத்தையும் மெல்ல மெல்லக் கரைத்து, தங்களது நியாயமான ஆசையை வலியுறுத்தி, விட்டுக்கொடுத்து வாழ்வோம் என்று உறுதி தந்து, எல்லோரின் ஆசீர்வாதங்களோடு திருமண பந்தத்தில் கலந்து, இன்று மிக மிக நன்றாக வாழ்ந்து வருகிறார்கள். பெற்றவர்களை ஏமாற்றாமல், குடும்ப கௌரவத்தைக் குலைத்து ஓடிப்போகாமல், தங்களின் உறுதியை வீட்டு சம்மதத்துடன் இணைந்ததில் காட்டின அந்தக் காதலர்களுக்குத் தலை வணங்கிய காதலைப் பார்த்து, நான் மரியாதை செய்தேன். என்றும் செய்வேன்.

ஒரு காவல் துறை அதிகாரியாக நான் தோறும் எத்தனையோ காதல்களைப் பார்க்கிறேன். காதல் என்கிற போர்வையில் கண்ணடித்துச் சிரிக்கும் உணர்வுகளுக்குப் பலியாகும் இளம் உள்ளங்களைப் பார்க்கும்போது பரிதாபமாக இருக்கும். சிரித்துப் பேசினாலே, ஒரு உதவி கேட்டாலே, நன்றி சொன்னாலே காதலாய்ப் பார்க்கும் துர்பாக்கிய நிலைக்கு இன்றைய இளைஞர்கள் தள்ளப்பட்டு விட்டிருக்கிறார்கள். காதல் என்கிற உன்னதமான மூன்றெழுத்தின் உண்மையான அர்த்தத்தை உணராததன் விளைவு தான், இன்றைக்குப் பெருகி வரும் விவாகரத்துகள். வக்கீல் நண்பர் ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கும்போது சொன்னார்... 'அதிகம் விவாகரத்து கேட்டு வருவது காதல் திருமணம் புரிந்தவர்கள் தான்' என்று. அன்றைக்கு ரொம்ப வருத்தப்பட்டேன். இந்த வார்த்தை காதலுக்கு அணிவிக்கப்பட்ட செருப்பு மாலை இல்லையா... காதலர்களுக்கு வழங்கப்பட்ட நற்சான்றிதழ்(?) இல்லையா... காதலே செய்திடாத எனக்கே வலித்ததென்றால், எதையும் எதிர்பாராமல் காதலித்து, கைப்பிடித்து வாழ்ந்து வரும் எத்தனையோ தம்பதியருக்கு எப்படி இருக்கும்!

## "அதிகம் விவாகரத்து கேட்பது, காதல் திருமணங்கள்தான்!"

'நான் காதலிச்சு கல்யாணம் பண்ணிக்கிட்டேன்' என்று சொல்ல கூச்சப்படுவார்களா இல்லையா!

காதல் உயர்வாக மதிக்கப்பட வேண்டுமென்றால், அது காதலர்கள் கையில்தான் உள்ளது. முதலில் எது காதல் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். கடற்கரை, ரெஸ்டாரெண்ட், சினிமா என்று இன்றைக்கு நீங்கள் குதூகலிக்கும் இதே இடங்களில்தான், நாளைக்கு கணவன், மனைவியாய் குழந்தையுடன் வரப்போகிறீர்கள். அன்றைக்கும் இங்கெல்லாம் காதலர்கள் இருப்பார்கள். அவர்களைப் பார்த்து நீங்கள் முகம் சுளிக்காதவாறு இருக்க வேண்டும் இன்றைய உங்கள் நேசம்.

எல்லாவற்றுக்கும் மேல் தகுதிகளை வளர்த்துக் கொள்ளுங்கள். காதலிக்கிற தகுதி, காதலிக்கப்படுகிற தகுதி, கணவனாகிற தகுதி... என்று உங்கள் தகுதிகளே அங்கீகாரமளிக்க வேண்டும் உங்கள் காதலுக்கு!

சந்திப்பு : **மு.மாறன்**
படங்கள் : **ஸ்ரீஹரி**

# போட்டுத் தாக்கு!

மொபைல் ஜுவல்லரி ஆதிகேசவனிடம் கேட்கக்கூடாத பத்துக் கேள்விகள் :

1. இனி நீங்க ஆதிகேசவனா? ஆதி 'கேஸ்'வனா?
2. 'அட்சய திரிதியை' அன்னிக்குத்தான் உங்க பிறந்த நாளா?
3. உங்களுக்கு 'நகை'ச்சுவை உணர்வு ஜாஸ்தியோ?
4. நகையில்லாம உங்க எடை எத்தனை காரட்?
5. கழுத்துல 111 சவரன்ல தோவடம் போட்டிருக்கீங்களே... அதுல 111க்கு அர்த்தம் என்ன?
6. உங்க செல்போன் ரிங்டோன் 'பொன்மகள் வந்தாள்' பாட்டுதானாமே... உண்மையா?
7. 'திருப்பதிக்கே கோவிந்தா...' இதுக்கு அர்த்தம் தெரியுமா உங்களுக்கு?
8. உங்க கை 'காப்பை' தங்கத்துல போட மனுக் கொடுத்தீங்களாமே?
9. மோதிர விஷயத்துல தாமரைக்கனிதான் உங்க ரோல் மாடலா?
10. 'மோதிரக் கையால' குட்டுப்பட்ட அனுபவம் உண்டா?

- பத்துக் கேள்வி பரமு



## பிரமிட் கேம்!

– ஜாலி விளையாட்டு





## போலார் எக்ஸ்பிரஸ்

– கவர் ஸ்டோரி

 **கோடை விடுமுறைப் போட்டி-II**

 **1000/- ரூபாய் பரிசுப் போட்டி**


உங்கள் குழந்தைகளின் குதூகலம்

# கோகுலம்

ஜூன் 2005 சிறுவர் மாத இதழ்

47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை-600 032

தனி இதழ் : ரூ.6/- ஆண்டுச் சந்தா : ரூ.72/-

• அ.தி.மு.க. அலுவலகம்...



அம்மா கட்சி ஆபீசுக்குள்ள நுழை யறதுக்குள்ள அம்புட்டு கெடுபிடி பண்ணாங்க... எல்லாத்துக்கும் அல்வா கொடுத்துட்டு, நுழைஞ்சி, மேட்டர் தேத்தறதுக்குள்ள தாவு தீர்ந்திடுச்சில்ல! உள்ள நுழைஞ்ச அஞ்சு நிமிஷத்துல சர்... புர்னு ரெண்டு டாடா சுமோ வந்துச்சு... இறங்கின ஆறு பேருமே 'திம்சு கட்டை' மாதிரி கும்முனு இருந்தாங்க! வழக்கம் போல ஒருத்தரோட செல்போன் சிணுங்கியது. அதுல வந்த ரிங் டோன், "நான் ஆணையிட்டால்... அது நடந்துவிட்டால்..." ஆஹா... இவரல்லவா உண்மையான ரத்தத்தின் ரத்தம்! அவரு செல்லுல பேசினதுல ஒரு சின்ன பேராவை மட்டும் எடுத்து விடறேன்... கேட்டுக்கங்க...

"ஏம்பா வட்டம்... இந்த எலசன் ஆபீசரு ராவு பண்ற ராவடி தாங்க முடியலப்பா. அங்க நின்னு பேசாதன்றாரு... இதுல கரண்ட் எடுக்காதன்றாரு... பேனரை வைக்காதன்றாரு... சவுண்ட் விட்டாலே சேஷனாயிடலாம்னு நெனைக்கிறாங்க போல... இருடி... எல்லாத்துக்கும் சேத்து வச்சு அம்மா ஆப்படிப்பாங்க பாரு" அட... அட... எலக்ஷன் கமிஷனுக்கே ரிவிட்டா... அப்படிப்போடு...!



• தேர்தல் பணியில் ராவ்...

இந்தக் குண்டு பார்ட்டிங்க நகர, அந்த இடத்தை ஆக்ரமிக்க வந்து கொண்டிருந்தது மூன்று பேர் கொண்ட கரை வேட்டிப்படை... அதுவும் எப்படித் தெரியுமா... அம்மா படம் போட்ட செயினு, அம்மா படம் போட்ட மோதிரம்னு சும்மா கலக்கலா வந்தவங்க, மம்மியையே நேர்ல பார்த்த மாதிரி திடீர்னு பம்மி பம்மிப் போனாங்க. என்னடா விஷயம்னா, வானத்தை முட்டிக்கிட்டு நிக்கற மாதிரி இருக்கற அம்மா கட்அவுட்டை பார்த்துட்டதுதானாம்... 'அப்பா.. சாமி... இதெல்லாம் ரொம்ப ஓவரு'ன்னு மனசுல நினைச்சுக்கிட்டேன்... பின்னே, வெளில சொன்னா முதுகுல டின்னு கட்டிடுவாங்கல்ல...

அப்படியே ஆபீசை விட்டு வெளியில் வந்தா, எதிர்த்தாப்புல ஒரு கரைவேட்டிப் பெரிசு பஸ் ஸ்டாப்புல குந்தவச்சி உட்கார்ந்துக்கிட்டு வெத்தலை பாக்கு போட்டுட்டிருந்துச்சு. என்ன ஆத்திரமோ தெரியல... ஒரு போட்டோகிராஃபரை வாய்க்கு வந்தபடி அர்ச்சனை செய்து கொண்டிருந்தார்.

"ஆஹா... மேட்டர் சிக்கப்போகுதப்பா..."ன்ற மகிழ்ச்சியில், முகத்தை அப்பாவி மாதிரி மாத்திக்கிட்டு, மெதுவாகப் பேச்சுக் கொடுத்து தூண்டில்

# விசிட்

# துண்டைக் காணோம்... துணியைக் காணோம்!



போட்டேன்.

"ஒண்ணுமில்லப்பு... எங்க அம்மாவும் வாத்தியார் மாதிரியே வள்ளல் தான். ஏதோ ஏழைப்பட்ட குழந்தைக்கு தர்றதுக்காக பணத்தை கையில வச்சிருக்காங்க. அதை எவனோ ஒரு அகராதி புடிச்சவன் போட்டோ எடுத்துட்டான். இதை என்னவோ பெரிய கொலைக் குத்தமாட்டம்(!) கருணாநிதி பேசிக்கிட்டு திரியறாரு. இதுக்குத்தான் நான் சொல்றது, தவறிக்கூட பத்திரிகைகாரங்களை அண்ட விடக் கூடாதுன்னு... இது எனக்குப் புரியுது... வண்டி பின்னாலயே ஓடி வர்ற மந்திரிங்களுக்குப் புரிய மாட்டேங்குதே..." என்று ரொம்பவும் ஆதங்கப்பட்டார். 'இனியும் இங்க நின்னா உன் உசிருக்கு உத்திரவாதமில்லப்பு'ன்னு உள்மனசு சொல்ல, மெதுவாக அந்த இடத்தை விட்டு எஸ்கேப் ஆகி, அருகிலிருந்த டீக்கடையில் ஒரு லைட் டீயை ஆர்டர் பண்ணிவிட்டு அமர்ந்தால், பக்கத்தில் அமர்ந்திருந்த ரத்தத்தின் ரத்தம் தானாக நம்மிடம் பேச்சுக் கொடுத்தது.

"தம்பி... ரெண்டு சீட்டுக்காக அலையற ஆளு இல்ல எங்கம்மா... அவங்க கணக்கே வேற... நீ வேணும்னா பாரு... இந்தக் கருணாநிதி கூட்டணியில இருக்குற ரெண்டு மூணு பேரு, எப்படியும் அவருக்கு ஜூட் விட்டுட்டு அம்மாகிட்ட வந்துடுவாங்க... இந்த ராமதாஸ் கட்சிக்கு 30 சீட்டு, வாஜ்பாய் கட்சிக்கு 20 சீட்டு, திருமாவளவனுக்கு 10 சீட்டுன்னு பிரிச்சுக் கொடுத்துட்டு, மத்த எல்லாத்துலயும் அம்மாவே நின்னு(!), அம்மாவே ஜெயிக்கப் போறாங்க. மத்த ஆளுங்க துண்டைக் காணோம் துணியைக் காணோம்னு ஓடப் போறாங்க. இது தான் நடக்கப் போகுது. அப்புறம் முக்கியமான விஷயம் தம்பி... ஊர்ல மாத்து கட்சிக்காரங்ககிட்ட இனிமே ரொம்ப விறைப்பு காட்டாதீங்க... ஏன்னா அம்மா எப்போ என்ன செய்வாங்கன்னு தெரியாது!"



- ஒற்றன்

படங்கள் : ஸ்ரீஹரி

**தமிழ்நாட்டு மக்களுக்கு பல ஆண்டுகளாக பரிச்சயமான நபர் பெப்ஸி உமா. அடையாறிலுள்ள அவரது வீட்டில் சந்தித்தபோது...**

**பன்னிரண்டு வருடங்களாக எப்படி ஒரே டீ.வி.யில், அதுவும் ஒரே நிகழ்ச்சியில் உங்களால் நீடிக்க முடிகிறது?**

"சன் டீவி. எம்.டி. இல்லாவிட்டால் பெப்ஸி உங்கள் சாய்ஸ் கிடையாது; இந்த ஷோ இல்லாவிட்டால் நான் கிடையாது. என் அனுபவத்தில் நான் வியந்து, அதிசயித்துப் போகும் ஒரே ஆண் கலாநிதி மாறன்தான். வெவ்வேறு மொழிகளிலும் 12 சேட்டிலைட் சேனல்கள், ஒரு எஃப்.எம். இருந்தும் அவற்றின் நிகழ்ச்சிகளில் சிறிய தவறு நிகழ்ந்தாலும் அதை முதலில் இவர்தான் கண்டுபிடிப்பார். ஒரு லோகோ, டைட்டில் சாங் அனுமதி என்றாலும் இவர்தான் இறுதியாக ஓ.கே. செய்வார். அவர் மாதிரியான அறிவாளியை நான் பார்த்ததே கிடையாது."

**கிரியேட்டிவாக இல்லாமல் ஒரே மாதிரி நிகழ்ச்சி பண்ண போரடிக்கவில்லையா?**

"ஒரு சராசரி நேயர் என்னிடம் பேசும் நிகழ்ச்சியை வேறு எப்படி வழங்கச் சொல்கிறீர்கள்? சன் டீவியின் ஃபார்மட்டுக்குள் வெளிவரும் பக்கா கமர்ஷியல் நிகழ்ச்சி. இங்கு என் அறிவைக் காட்ட முடியாது. நான் அந்த ப்ரைம் டைமில் என்ன பொதுப்பணியா செய்ய முடியும்? இப்படி என்னைக் குற்றம் சொல்வது பெரும்பாலும் பத்திரிகைகள்தான். அவர்கள் மட்டும் வித்தியாசமாகவா செய்கிறார்கள்? வாரமானால் அவர்களுக்கு த்ரிஷா, மும்தாஜின் க்ளாமர் படங்கள் போடணும், பத்திரிகை பத்து லட்சம் காப்பிகள் விற்கணும். மற்றபடி வித்தியாசமான பொது அறிவு விஷயங்களில் எத்தனை பேருக்கு அக்கறை இருக்கிறது? அரைகுறையான உடைகள் எதுவும் போடாமல் கண்ணியமாக நிகழ்ச்சிகள் செய்வதை ஏன் யாரும் பாராட்டுவதில்லை."

**அதுதானே... ஏன்?**

"சுடிதார் போடும்பொழுது இருபுறமும் மடித்து துப்பட்டாவை போட்டால் என்ன மேடம் பெட்ஷீட் மாதிரி ஃபுல்லா கவர் பண்றீங்கன்னு சொல்றாங்க. ஒரு முறை நான் தமிழகத்தின் மிகப்பெரிய விருது வழங்கும் விழாவில் தொகுத்து வழங்கச் சென்றபோது 'இதுவரை பெப்ஸி உமா கிளாமராகத் தோன்றியதில்லை. இந்நிகழ்ச்சிக்கு கிளாமராக உடை உடுத்தினால்தான் ஷோ எடுபடும்' என்று ஒரு பிரபல பத்திரிகையாளர் வற்புறுத்திய போது, பெரிய கும்பிடு போட்டுவிட்டுத் திரும்பிவிட்டேன். நம் ஊரிலிருந்து வெளிவரும் ஆங்கில சேனல்களின்\ காம்பியர்களைப் பார்க்கும்போது எனக்குப் பேரதிர்ச்சியாக இருக்கிறது. பாத்ரூமுக்குள்ளிருந்து வெளிவந்தது போல் வெறுமனே துண்டை மட்டும் கட்டிக்கொண்டு நிகழ்ச்சி வழங்குகிறார்கள். என்ன செய்வது? எல்லாம் நம் தலையெழுத்து!"

**மீடியா பெண்களை எக்ஸ்ப்ளாய்ட் செய்கிறதா?**

"தவறு. பெண்களே தங்களுக்குத் தீங்கு இழைத்துக் கொள்கிறார்கள். பதினாறு வயதிலிருந்தே ஒரு பெண்ணுக்கு உடல் ரீதியான எல்லா விவரங்களும் தெரிந்துவிடும். அப்படியிருக்கும் பட்சத்தில் மாடர்ன், ஃபேஷன் என்று கிளாமராக நடித்துவிட்டு, என்னிடம் தவறாக நடக்க முயற்சிக்கிறார்கள் என்று ஒப்பாரியிடுவது எந்த விதத்தில் நியாயம்?

பொதுவாகவே ஆண்கள், பெண்களைப் போகப் பொருளாகத்தான் பார்க்கிறார்கள். இரண்டாயிரம் வருடங்களாக போர்த்தியே வந்த பெண் சமூகம் திடீரென இதுபோல கடை பரப்பினால் ஆண்களால் மட்டும் வேடிக்கையா பார்க்க முடியும்? என்னைப் பொறுத்தவரை இதுவரை எழுநூறு ஸ்டேஜ் ஷோக்கள் பண்ணியுள்ளேன். எங்கேயும் யாரும் என்னிடம் தவறாக நடந்துகொண்டது கிடையாது. மேடம் என்றே மரியாதையாக அழைப்பார்கள். பெண் என்றால் மரியாதையாக வணங்க வேண்டும், கைதட்டி அழைக்கக் கூடாது."

**டீ.வி. காம்பியர்களால்தான் தமிழ் மாசுபடுகிறதா?**

"எனக்கு ஒரு விஷயம் புரியலை. தமிழ் தமிழ்னு மார்தட்டுகிறவர்கள் ஏன் தமிழ் சினிமாவின் டைட்டிலை மட்டும் மாற்றச் சொல்கிறார்கள். சுத்தமான தமிழில் பெயர் வைத்துவிட்டு, படத்தினுள்ளே கலாசார சீர்கேடான காட்சிகளை வைத்தால் அவர்களுக்குச் சம்மதமா? தமிழ் என்பது மொழி மட்டுமல்ல, கலாசாரமும்கூட. இது ஏன் யாருக்குமே புரிவதில்லை. ஒரு பிரபல நடிகர் என்னிடம் வந்து, 'பெப்ஸி உமாவினால்தான் டீவியில் தமிழ்க் கொலை நடக்கிறது'



# “எல்லாம் தலையெழுத்து!”

## – வேதனையில் பெப்ஸி உமா

என்றார். நான் சொன்னேன், “உங்க படங்களில் வரும் காதல் காட்சிகளால்தான் தமிழ்க் கலாசாரமே தேய்கிறது” என்றேன். சென்னையிலேயே ஒரு சில கல்லூரிகளின் மாணவிகள், நடிகைகள் மாதிரிதான் ட்ரெஸ் செய்து கொள்கிறார்கள். தமிழும் தமிழ்க் கலாசாரமும் டீ.வி.யில் மட்டுமல்ல ஊரெங்கும் மாசுபட்டுத்தான் கிடக்கு.”

**சமூக அக்கறையோடு பேசும் நீங்கள் சன் டீ.வி.யில் செய்ததெல்லாமே சினிமா நிகழ்ச்சிகள்தானே?**

“நான் சன் டீ.வி.யில் தயாரித்த ‘ஸ்டார் ஷோ’வின்போது என் தனித்துவத்தை காண்பிக்க நினைத்தேன். ஆனால் அரை மணி நேர ஸ்லாட்டை ஒன்றரை லட்சத்துக்கு வாங்கும் மார்க்கெட்டிங் பிரிவினர், ‘ரம்பா பேட்டியென்றால் சுலபமாக விளம்பரம் கிடைக்கும்’ என்று சொல்லும்பொழுது, என்னால் மட்டும் என்ன செய்ய முடியும்? சினிமாவையும் தாண்டி இதர துறையிலுள்ள பிரபலங்களை அதில் கொண்டு வரத்தான் செய்தேன். அதற்குமேல் என்னால் எதுவும் செய்ய முடியவில்லை.”

**- ச.ந.கண்ணன்**

படம் : **ஸ்ரீஹரி**



கலை விமரிசனத்தில் நான் கையாளும் முறையைப் பற்றி இங்கு சிறிது சொல்ல விரும்புகிறேன். ஒரு புத்தகத்தையோ, நாடகத்தையோ, சங்கீதக் கச்சேரியையோ பற்றி எழுத விரும்புகிறவன், இரண்டு முறையில் அவற்றைப் பார்க்க வேண்டும். ஒரு பூந்தோட்டத்துக்கு நாம் போகிறோமென்று வைத்துக்கொள்ளலாம். அதை எப்படிப் பார்க்கிறோம்? முதலிலே சற்று தூர இருந்து தோட்டம் முழுவதையும் ஒருங்கே பார்த்து அனுபவிக்கிறோம். பிறகு தோட்டத்திற்குள் புகுந்து ஒவ்வொரு செடியாக, ஒவ்வொரு பூவாகப் பார்த்து இன்புறுகிறோம்.

புத்தக விமர்சனங்கள், நாடக விமர்சனங்களைக் கையாள வேண்டிய முறையும் இதுதான். முதலில்

# இப்படித்தான் இருக்க வேண்டும்!

முழுமையாகப் பார்த்து, "மொத்தத்தில் இது நன்றாயிருக்கிறதா? இலக்கிய வளர்ச்சிக்கோ, கலை வளர்ச்சிக்கோ உதவி செய்யக் கூடியதா?" என்று தீர்மானிக்க வேண்டும். முழுமையாகப் பார்க்கையில் நன்றாயிருந்தால், அதனுடைய உள் விவரங்களில் உள்ள குறைகளைப் பிரமாதப் படுத்த வேண்டியதில்லை; குறைகளை நிவர்த்திக்கும் நோக்கத்துடன் அவற்றை எடுத்துக் காட்டினால் போதும். முழுமையாகப் பார்க்கும்போது, "பயனற்றது" "கலை வளர்ச்சிக்குத் தீங்கு பயப்பது" என்று தோன்றினால், அதைப் பற்றி எழுதும் முறையே வேறு. அசோக வனத்தை அழிப்பதில் அனுமார் கையாண்ட முறைதான் அதற்குச் சரி. "இங்கே ஒரு செடி நன்றாயிருக்கிறதே" 'அங்கே ஒரு பூ நன்றாயிருக்கிறதே!'" என்று யோசித்துக் கொண்


அமரர் கல்கி

டிருக்க முடியாது.

இந்த 'முழுமை நோக்கம்' எவ்வளவு அவசியம் என்பதற்கு ஓர் உதாரணம் சொல்கிறேன். மிகச் சிறந்த புத்தகம் ஒன்றை நீங்கள் படிக்கிறீர்கள். அதனுடைய இலக்கியச் சுவையை நினைத்து நினைத்து மகிழ்கிறீர்கள். உங்களுடைய நண்பர் ஒருவருக்கு அதைக் கொடுத்துப் படிக்கச் சொல்கிறீர்கள். அவர் படித்துவிட்டு வருகிறார். "புத்தகம் எப்படியிருந்தது?" என்று கேட்கிறீர்கள். "முப்பத்தேழாம் பக்கம் இருபத்து நாலாவது வரியில் ஓர் அச்சுப் பிழை இருந்ததே... அதைக் கவனித்தீர்களா?" என்று கேட்கிறார். உங்களுக்கு எப்படி இருக்கும்? "பகவானே, இவ்வளவு அற்புதமான புத்தகத்தில் இவருக்கு ஓர் அச்சுப் பிழையைத்தானா அனுபவிக்கத் தெரிந்தது" என்று நினைத்து அனுதாபப்படுவீர்கள் அல்லவா?

அதற்குப் பதிலாக அவர், "புத்தகம் மிக நன்றாயிருக்கிறது; எத்தனை தடவை வாசித்தாலும் அலுக்காது. ஆனால் அச்சுப் பிழை ரொம்ப இருக்கிறது. நல்ல பதிப்பு ஒன்றை யாராவது வெளியிடக் கூடாதா?" என்றால், நீங்களும் சேர்ந்து 'ஆமாம்' போடுவீர்கள்.

இன்னொரு உதாரணம் : 'மாலி' ஒரு சித்திரம் வரைகிறார். அதில் வரும் மனிதர்களின் மனநிலைமையை அற்புதமாய் முகபாவத்தில் சித்திரித்துக் காட்டியிருக்கிறார். அவர்களைப் பார்க்கப் பார்க்கச் சிரிப்பு வருகிறது. எல்லாம் எங்கேயோ பார்த்த முகங்களாகத் தோன்றுகின்றன. நண்பரிடம் காட்டுகிறீர்கள். அவர் உற்றுப் பார்த்துவிட்டு, "ஆமாம்! இந்த 'மாலி' நாற்காலியே பார்த்ததில்லையோ?' பின் சட்டம் இல்லாமல் நாற்காலி போட்டிருக்கிறாரே! நாற்காலி எப்படி நிற்கும்?" என்கிறார். உங்களுக்கு எப்படி இருக்கும்?

ஆகவே, இலக்கியம், நாடகம் ஆகியவைகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்லுமுன், அவற்றை முழுமையா கப் பார்த்துச் சிந்தித்து முடிவு செய்தல் இன்றியமையாதது. இந்த முறையைத்தான் நான் ஆரம்பத்திலிருந்து கடைப்பிடித்து வருகிறேன்.

- **'கல்கி களஞ்சியத்'திலிருந்து**
**வானதி பதிப்பகம்**



"எதுக்குத் தலைவர் கையில சுத்தியலை வச்சுக்கிட்டு அலையறாரு?"

"எதிர்க்கட்சித் தலைவர் சட்டசபையில் ஆணித்தரமா பேசினாராம்."

- ஜெயந்தி சிவக்குமார்



"டி.வி. சீரியல் டைரக்டரை பொண்ணு பார்க்கக் கூப்பிட்டது தப்பாப் போச்சா... ஏன்?"

"பாடத் தெரியுமா, ஆடத் தெரியுமான்னு கேட்பாருன்னு பார்த்தா, அழத் தெரியுமான்னு கேட்டுட்டாரு!"

- கே.ஆனந்தன்

"காசு கொடுக்காம சாப்பிட்டவரை மாவு ஆட்டச் சொன்னீங்களா?"

"ஆமா... ஏன்... என்ன ஆச்சு?"

"மறுபடி பசி எடுக்கறதா சொல்லிட்டு மாவையே வழிச்சு முழுங்கறார்!"

- சீர்காழி சாமு




• தினேஷ்


• உமா


• சரவணன்


• கிருஷ்ணகுமார்

தினேஷ் - ஷர்மிளா இருவரும் தனியார் சாஃப்ட்வேர் நிறுவனமொன்றில் பணியாற்றி வரும் இளம் தம்பதி. அவசர வேலை காரணமாக அன்று இரவு திடீரென பெங்களூருக்குப் புறப்பட வேண்டும் என்கிற நிலைமை தினேஷுக்கு. "வேற வழி இல்ல... நீ வேணும்னா நாளைக்கு ஆபீஸ்ல லீவ் சொல்லிடேன்" என்று ஷர்மிளாவிடம் கூறிவிட்டுப் புறப்படுகிறார். மறுநாள் காலை ஷர்மிளா அலுவலகத்துக்குச் சென்று லீவ் லெட்டரைக் கொடுத்து விட்டு, தானும் லீவ் போட்டுவிட்டு வீடு திரும்ப, அங்கு அவருக்கு பலத்த இடி ஒன்று காத்திருந்தது. ஆம்... அவரது வீடு கொள்ளையடிக்கப்பட்டிருந்தது. பீரோவில் வைக்கப்பட்டிருந்த எழுபத்தைந்து சவரன் நகை மற்றும் கேமரா, டி.வி.டி பிளேயர் உள்ளிட்டவை திருடப்பட்டிருந்தன.

காலை ஆறரை மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டால், மீண்டும் இரவு ஏழு மணிக்குத்தான் வீடு திரும்புவார்கள் மதுரவாயலைச் சேர்ந்த சரவணன் - உமா தம்பதி. வழக்கம்போல் அன்றைக்கும் பணிக்குப் போய்விட்டு இரவு வீடு திரும்பியவர்களுக்கு பேரதிர்ச்சி. அறைக்குள் சிதறிக் கிடந்த சாமான்களை ஒதுக்கி விட்டு, பீரோவைத் திறந்து பார்த்தவர்கள், உறைந்து போயிருக்கிறார்கள். பீரோவிலிருந்த முப்பத்திரண்டு சவரன் நகை கொள்ளையர்களால் சூறையாடப்பட்டிருந்தது.

சென்னை மந்தைவெளியைச் சேர்ந்த வங்கி ஊழியர் கிருஷ்ணகுமார், காலை ஏழே முக்கால் மணிக்கு குடும்பத்துடன் மண்ணடி கோயிலுக்குப் புறப்பட்டவர், திரும்ப வீட்டுக்கு வரும்போது மணி பன்னிரண்டே கால். திறந்துகிடந்த வாசற் கதவைப் பார்த்துப் பீதியடைந்தவர், பதறியடித்தபடி பீரோவைச் சென்று பார்த்திருக்கிறார். ஆனால் எல்லாம் கைமீறிப் போய்விட்டன. தமது அக்கா மகளின் கல்யாணத்துக்கு வைத்திருந்த ஐம்பத்தேழாயிரம் ரூபாய், பத்துப் பவுன் நகை எல்லாம் மொத்தமாகத் திருடப்பட்டிருந்தன.

"இந்த மூணு குடும்பமும் தங்களோட வீட்டுப் பாதுகாப்பு விஷயத்துல அதிகமா அலட்சியம் காட்டியிருக்காங்க. அதோட விளைவுதான் இந்தத் திருட்டுகள்'' என்கிறார் இந்த வழக்குகளை விசாரித்து வரும் ஆய்வாளர் அமிர்தலிங்கம்.

மூன்று மணி நேரமோ, மிஞ்சிப் போனால் அரை நாளோ வெளியில் சென்றுவிட்டு வீடு திரும்புவதற்குள் இந்த அதிரடிக் கொள்ளைகள் அரங்கேற்றப் பட்டுவிட்டிருக்கின்றன என்றால், இப்பொழுது விடுமுறைக் காலம். வீட்டைப் பூட்டிக்கொண்டு மாதக் கணக்கில் வெளியூர் சென்று விடுபவர்களின் கதி?

"விடுமுறைக்காக வீட்டைவிட்டுப் புறப்படுவதற்கு முன் சம்பந்தப்பட்டவர்கள் காவல் நிலையத்தை அணுகி, தங்களுடைய முகவரி, செல்லுமிடம் பற்றிய முழு விவரங்களை காவல் நிலையத்தில் பதிவு செய்ய வேண்டும். 'Locked House Register' என்கிற பதிவேட்டில் அந்தத் தகவல்கள் பதிவாகிவிடும். அதன் பிறகு வீட்டுக்காரர்கள் திரும்ப வரும் வரை அந்த வீட்டை காவலர்கள் தொடர்ச்சியாகச் சென்று மேற்பார்வையிட்டு வருவார்கள். இது மிகுந்த பயனுள்ள முறை. ஆனால், இந்த விஷயத்தில் காவல் துறையினர் மீது பொது மக்கள் நம்பிக்கை வைத்துச் செயல்படும் பட்சத்தில் இதன் பயன் நிச்சயம் அதிகமாகத்தான் இருக்கும்" என்று கூறும் காவல் துறை, பொது மக்கள் எச்சரிக்கையாக நடந்து கொள்ள சில வழிமுறைகளையும் வகுத்துள்ளது.

# விடுமுறைக்கு ஊர் செல்கிறீர்களா? எச்சரிக்கை!

• அமிர்தலிங்கம்

"விடுமுறை என்றவுடனேயே குழந்தைகள் தாங்கள் செல்லுகின்ற பள்ளி மற்றும் விளையாட்டு மைதானத்திலிருக்கும் தமது நண்பர்களிடம் சொல்லி சந்தோஷமடைவர்... ஆனால் இது பல தவறுகளுக்குக் காரணமாகி விடுகின்றன. இதை அந்தப் பகுதியில் இருக்கும் சமூக விரோதிகள் ஒட்டுக் கேட்டுவிட்டு, வீட்டுக்காரர்கள் வெளியூர் சென்றிருக்கும் நேரத்தில் தங்களது கைவரிசையைக் காட்டிவிடுவர். இது குழந்தைகளுக்கு மட்டுமல்ல... குழாயடி, காய்கறி மார்க்கெட், அலுவலகம் என்று பாராமல் நண்பர்களுடன் விவாதிக்கும் பெரியோர்களுக்கும் பொருந்தும்.

அதே போல் பீரோவிலேயே மொத்தப் பணம் மற்றும் நகைகளை வைத்துவிட்டுச் சென்றுவிடுகிறார்கள். இதுவும் தவறான போக்கு. அதற்காக பணத்தையோ, நகையையோ செல்லுமிடத்திற்கே எடுத்துச் சென்றுவிடுங்கள் என்று கூறவில்லை. மாறாக வங்கிப் பெட்டகத்தைப் பயன்படுத்தலாம். ஆனால் இதில் பலருக்கு உடன்பாடு இருக்காது. அப்படியிருப்பவர்கள் எல்லா பொருட்களையும் ஒரே இடத்தில் வைக்காமல் மிகவும் எளிமையான, அதே சமயம் எளிதில் கண்ணுக்குத் தென்படாத பகுதிகளில் வைக்கலாம்.



பெரும்பாலான வீடுகளில் இன்றைக்கு வேலைக்கு ஆட்கள் வைத்துள்ளனர். ஆனால், அவர்களைப் பற்றிய முழு விவரம் . அவர்களுக்குத் தெரிந்திருக்காது. கேட்டால், 'வியாசர்பாடியிலிருந்து வர்றானாம். பத்து வருஷமா

இருக்கான்' என்பார்கள். இதுபோன்ற கண்மூடித்தனமான போக்குதான் பல திமைகளுக்குக் காரணம். வீட்டு வேலை யாட்கள் பற்றி முழு விவரமும் தெரிந்த பின்னர்தான் வேலைக்கே அமர்த்த வேண்டும். வெளியூர் செல்பவர்கள், தங் களுடைய நம்பிக்கைக்குரிய வேலை யாட்களை வைத்து காலையும் மாலை யும் தோட்டத்தைச் சுத்தம் செய்யும் படியோ, செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றும்படியோ பணிக்கலாம். இதனால் வீட்டில் ஆள்நடமாட்டம் இருக்கிறது. ஆகவே நமது கைவரிசை இங்கு எடு படாது என்று உணர்ந்து கொண்டு திரு டர்கள் அந்த வீட்டைத் தவிர்க்க வாய்ப்புகள் அதிகம்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக நமது அண்டை வீட்டுக்காரர்களுடன் சுமூக உறவைக் கடைப்பிடித்தாலே போதும்... அது நமக்கு மிகப்பெரிய ப்ளஸ்ஸாக அமையும். சரியான உறவு இல்லாத பட்சத்தில், 'அங்கு திருட வந்தால் நமக்கென்ன?' என்று அவர்கள் இருந்துவிடுவதற்கு வாய்ப்பு கள் உண்டு. இதைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். நாம் செல்லு

மிடத்தின் முகவரி, தொலைபேசி எண் உள்ளிட்ட முழு விவரங்களை அண்டை வீட்டுக் காரர்கள், குடியிருப்போர் நலச் சங்கம் உள்ளிட்டவர்களுக்குக் கொடுத்து விட்டுச் செல்வது'' என்று கூறும் துணை ஆணையர் தயாநிதி, இன்னொரு விஷயத்தையும் முக்கியமாகக் குறிப்பிட் டார்.

''கதவுக்கு வெளியே தொங்கும் பூட்டுகள், வீட்டுக்காரர்கள் வீட்டில் இல்லை என்பதை பலருக்கும் தெளிவாக உணர்த்திவிடும். ஆகவே முடிந்த வரை இன்னர் லாக்குகளை பயன்படுத்தவும். பல வீடுகளில் ஜன்னலுக் குப் பக் கத்தில்தான் பீரோவே இருக்கிறது. உதாரணமாக அந்த ஜன்னலில் ஆறு கதவுகள் என்று வைத்துக் கொள்வோம். அதில் ஒரேயொரு கதவு மட்டும் சாத்த முடியாமல் இருக்கும். 'மற்ற ஐந்தையும் தான் சாத்தி விட்டோமே...' என்று அந்த ஒற்றைக் கதவை சாத்தாமல் அலட்சிய மாக விட்டுவிடுவர். ஆனால், அதை



மட்டுமே பயன்படுத்தி மற்ற எல்லா கதவு களையும் திறந்துவிட்டு கொள்ளையடித்துச் செல்லத் தயாராக இருக்கிறார்கள் என்பதை நாம் உணர்ந்து, ஜன்னல் விஷயத்தில் மிகுந்த கவனமாக இருக்க வேண்டும். வீட்டு வாசல் பக்கமும், கொல்லைப் பக்கமும் விளக்குகளை எரியச் செய்துவிட்டு செல்வதும் பாதுகாப்பான விஷயம் தான்'' என்கிறார்.

பிறகென்ன... காவல் துறை கூறும் இந்த முன்னெச்சரிக்கைகளை ஒழுங் காகக் கடைப்பிடித்தாலே போதும்... விடுமுறைக்கு ஊர் சென்று, திருட்டு பயமின்றி சந்தோஷமாக இருந்து விட்டு வரலாம்!

- கோகிலா

### பதிலில்லை!

**ம**றுமலர்ச்சி தி.மு.கவின் தலைமை அலுவலகமான தாயகத்தில் பணியாற்றும் அலுவலக நிர்வாகிகள் பலரும் நெல்லைச் சீமையைச் சேர்ந்தவர்களாகவே இருக்கின்றனர். ஏனென்று கேட் டால், எவரும் வாய் திறப்பதில்லை.




## புக்பேங்க்

பிரச்னை பூமிகள் - ஜி.எஸ்.எஸ், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002.

ஹாங்காங் தொடங்கி திபெத் வரை மொத்தம் 23 பிரச்னை பூமிகளைப் பற்றின கட்டுரைகளின் தொகுப்பு. படிக்கப் படிக்க வியப்பைத் தரும் வரலாற்று உண்மைகளுக்குப் பஞ்சமே இல்லை. சீனா, ஹாங்காங்கை 99 வருடம் பிரிட்டனுக்குக் குத்தகைக்கு விட்டது... போதிய மருத்துவ வசதி இல்லாததால் ஆப்கானிஸ்தானின் சில பகுதிகளில் பாதிக்கும் மேற்பட்ட குழந்தைகள் ஒரு வயதை எட்டுமுன் இறந்து விடுவது... என்பன போன்ற பல...

தொடர் வெளிவந்தபோது இருந்த பிரச்னைகளின் தீவிரம் தற்போது திசைமாறியுள்ளது. யாசர் அராபத் தொடர் வந்த காலத்தில் உயிரோடிருந்தார். இப்போது இல்லை. இதுபோன்று இன்னும் பல. எனவே தொடரைப் புத்தகமாக்கும் போது தகுந்த திருத்தங்கள் செய்ய வேண்டும் என்பதை உணர்ந்து ஆங்காங்கே திருத்தி வெளியிட்டிருப்பதைப் பாராட்ட வேண்டும். இன்று புதிய போப் ஆண்டவர் தேர்வாகியுள்ள நிலையில், காலஞ்சென்ற பழைய போப் ஆண்டவர் பற்றிய 'உடல் நலம் வெகுவாகக் குறைந்திருக்கிறது. குடல்வால் அறுவை சிகிச்சையும் செய்யப்பட்டிருக்கிறது' போன்ற வரிகள் பொருத்தமில்லாமல் இருக்கின்றன.

**- திருப்பூர் கிருஷ்ணன்**

## துணிச்சலான முயற்சி!

அரவிந்த அமுதம் - திருப்பூர் கிருஷ்ணன், திருப்பூர் குமரன் பதிப்பகம், 57 - பி, பத்மாவதி நகர், காமராஜ் சாலை, சென்னை - 92.

எப்போதோ மறைந்த மகான்களின் சரிதத்தை எழுதும்போது எழுத்தாளருக்குச் சில சுதந்திரங்கள் இருக்கும். ஆனால் சமீபத்தில் மறைந்த ஒருவர் குறித்த சரிதத்தை எழுதுவது என்பது கொஞ்சம் கம்பிமேல் நடக்கும் விஷயம்தான். அரவிந்தரோடு பழகியவர்கள் இன்னமும் ஒரு சிலர் இருக்கையில், தவறுகள் இருப்பின் அவை பளிச்சென்று இனம் காட்டப்படும். ஆக அரவிந்த அமுதம் ஒரு துணிச்சலான முயற்சியும் கூட. அரவிந்தர் குறித்த முதல் நூல் அல்ல இது. இதை ஒப்புக்கொள்வதோடு அவர் குறித்த பிற சரிதங்களை எழுதியவர்களின் பெயர்களையும் நூலில் குறிப்பிடும் நேர்மை நூலாசிரியருக்கு இருக்கிறது.




அரவிந்தரின் அனுபவங்களை விவரிக்கும்போது ஆசிரியர் தன் எண்ண ஓட்டங்களையும் வினாக்களையும் சேர்த்தே பதிவு செய்திருப்பது சுவை. நடுநடுவே உள்ள ஆன்மிக, இலக்கிய இடைச்செருகல்கள் சுவையை அதிகரிக்கின்றன. எனினும் அரவிந்தரின் மீது மரியாதை கொண்ட, ஆனால் பக்தி உணர்வு தோன்றியிராதவர்களுக்கு நூலின் சில பகுதிகளை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் ஏற்பட வாய்ப்பு உண்டு.

'சமமான ஆன்மிக சக்திகள் அல்லவா ஸ்ரீஅரவிந்தரும் ஸ்ரீஅன்னையும்' என்று நூலில் குறிப்பிட்டாலும் அரவிந்தரின் இறுதி ஆண்டுகளில் அவர் வாழ்வில் முக்கிய சக்தியாக விளங்கிய 'மீர்ரா' குறித்து நூலில் குறைவான குறிப்புகளே உள்ளன.

**- ஜி.எஸ்.எஸ்.**

# மக்களின் கடவுள்!

பா.ராகவன்

டால்ஸ்டாயின் மிகச் சிறந்த படைப்பு 'போரும் அமைதியும்' என்பது அநேகமாக எல்லோருக்கும் தெரியும். அவரது மிக மோசமான படைப்பு என்று ஒட்டுமொத்த இலக்கிய உலகமும் நிராகரித்த நாவல் 'புத்துயிர்ப்பு'.

இந் நாவல், விலைமாது ஒருத்தியை நீதிமன்றத்தில் விசாரிக்கும் ஒரு காட்சியில் ஆரம்பமாகிறது. அவள் மீது ஒரு திருட்டுக் குற்றம் சுமத்தப்படுகிறது. விசாரணையை கவனிக்கும் ஜூரிகளுள் ஒருவனுக்கு அவளை ஏற்கெனவே தெரியும். வாலிப வயதில் அவளைத் திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லி ஏமாற்றிக் கைவிட்டவன் அவன். கைவிட்ட பிறகு அவள் என்ன ஆனாள், எங்கே போனாள் என்றெல்லாம் அவனுக்குத் தெரியாது. எத்தனையோ பல ஆண்டுகளுக்குப் பிறகு, அந்த நீதிமன்றத்தில்தான் முதல் முறையாக அவளைச் சந்திக்கிறான். பார்த்த கணத்தில் ஏற்படும் அதிர்ச்சி, மெல்ல மெல்ல குற்ற உணர்வாக அவன் மனத்தை அரிக்கத் தொடங்குகிறது. இதற்கிடையில், அவள் செய்த அல்லது செய்யாத குற்றத்துக்கு தண்டனை அளிக்கப்பட்டு, அவள் சிறைச்சாலைக்கு அனுப்பப்பட்டுவிடுகிறாள். சிறைக்குச் சென்று அவளைப் பார்த்து, வருத்தம் தெரிவித்து, செய்த பாவத்துக்குப் பரிகாரமாக, அவளைத் திருமணம் செய்து கொள்வதாக உறுதியளிக்கிறான் அவன். ஆனால், அவன் தன் வாக்குறுதியை நிறைவேற்றுவதற்குள் அவள் இறந்துவிடுகிறாள்.

டால்ஸ்டாயின் நண்பர் ஒருவர் அவரிடம் வருணித்த உண்மைச் சம்பவம் இது. டால்ஸ்டாய் இதனை எழுத ஆரம்பித்தபோது அவருக்கு அறுபத்திரண்டு வயது. அப்போதே மிகவும் தள்ளாமை வந்திருந்தது அவருக்கு.

எழுத உட்கார்ந்தால் ஒரே மூச்சில் எழுதி முடிப்பது என்பதெல்லாம் அவரிடம் கிடையாது. ஒரு நாவல் என்று தொடங்கினால், எப்படியும் ஐந்தாறு வருடங்கள் எழுதுவார். திரும்பத் திரும்ப எழுதியதைத் திருத்தியபடியே இருப்பார். நடுவில் ஏதாவது பொதுக்காரியம், ஊர்ப் பிரச்னை என்று வந்து விட்டால், நாவலைத் தூக்கி வைத்துவிட்டு அதை கவனிக்கப் போய்விடுவார். புத்துயிர்ப்பு எழுத ஆரம்

**"எந்தப் படைப்புக்கும் ஒரு பைசாகூட வாங்கமாட்டார்!"**

பித்தபோதும் டால்ஸ்டாய்க்கு அப்படியொரு நெருக்கடி ஏற்பட்டது. ரஷ்யாவில் அப்போது டுகோப்ர்ஸ் என்றொரு இயக்கம் இருந்தது. இயக்கம் என்று சொல்வது அத்தனை சரியில்லை. ஒரு குறிப்பிட்ட மனோபாவம் கொண்ட சில ஆயிரம்



பேர், ஓர் அமைப்பாக இருந்தார்கள். கிறிஸ்தவர்கள்தான். ஆனால், பாதிரியார்களை அவர்கள் பொருட்படுத்தமாட்டார்கள். தேவாலயங்களில் பைபிளுக்கு அளிக்கப்படும் விளக்கங்களை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். மறுபிறவி நம்பிக்கை, கர்ம வினையில் நம்பிக்கை என்று அவர்கள் ஏனைய ரஷ்ய கிறிஸ்தவர்களுடன் ஒட்டாதவர்களாக இருந்தார்கள். சமய ரீதியில் மட்டுமல்ல... அரசியலிலும் அவர்களுக்கென்று தனித்த பார்வை இருந்தது. அரசாங்கம் என்ற அமைப்பின் மீது நம்பிக்கை இல்லாதவர்களாக இருந்தார்கள்.

ஆனால், அவர்களால் யாருக்கும் எந்தக் கெடுதலும் கிடையாது. அவர்கள் உண்டு. அவர்களது நம்பிக்கை உண்டு. எல்லைப்புற ரஷ்ய கிராமங்களில் நிலபுலங்களில் வேலை பார்த்து பிழைத்து வந்தவர்கள்.

இந்த டுகோபர்ஸ் மக்களுக்கு பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வருடங்கள் மிகவும் சிக்கல் மிக்கதாக இருந்தது. ரஷ்யாவில் அப்போது ஒவ்வொரு ஆண்மகனும் ராணுவ சேவையாற்றியாக வேண்டும். எந்த இனம், யார் என்றெல்லாம் பார்க்க மாட்டார்கள். அது கட்டாயம். ஆனால் அரசாங்கத்தையே விரும்பாத மக்கள், ராணுவத்தில் எப்படி இணைந்து போர் முனைக்குப் போவார்கள்?

அவர்கள் மறுத்தார்கள். ஆகவே அரசாங்கம் அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விடத் தொடங்கியது. நேரடித் தாக்குதல், கூலிப்படைத் தாக்குதல் என்று இருவிதமாகவும் டுகோபர்ஸினரை அரசாங்கம் ஒழிக்கத் தொடங்கியது. டால்ஸ்டாய்க்கு இது மிகவும் வருத்தமளித்தது.

யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்யாமல் ஒதுங்கியிருக்கும் மக்களிடம் அரசாங்கம் இப்படிக் காட்டுமிராண்டி போல் நடந்துகொள்வது அவருக்குப் பிடிக்கவில்லை. ஏதாவது செய்து அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று முடிவு செய்தார். ஆனால் தனியொரு மனிதர் என்ன செய்ய முடியும்?

நிறைய போராட்டங்கள்

நடத்தி, பல தரப்பினரைச் சந்தித்து, விளக்கம் சொல்லி அவர்களை ஆதரிக்குமாறு கேட்டு என்னென்னவோ செய்து பார்த்தார். இப்படி அரசுக்கு எதிராக ஆள் திரட்டுவோரையும் கைது செய்துவிடும் அபாயம் இருந்தது. எப்படியோ தப்பித்தார் டால்ஸ்டாய்.

வெகுநாள் போராட்டத்துக்குப் பிறகு ரஷ்ய அரசு ஒரு அறிவிப்பை வெளியிட்டது. டுகோபார்ஸை இனி ஒன்றும் செய்வதில்லை. ஆனால், அவர்கள் ரஷ்ய எல்லைக்குள் இருக்கக் கூடாது. எங்காவது போய்விடுவதில் அரசுக்கு ஆட்சேபணை இல்லை.

ஆயிரக்கணக்கான டுகோபார்ஸ் கொடூரமான தாக்குதல்களுக்கு ஆட்பட்டு உயிரை இழந்திருக்க, மிச்சமிருப்போராவது உயிர்பிழைக்க ஏதேனும் வழியுண்டா என்று டால்ஸ்டாயும், அவரது ஆதரவாளர்களும் தேடினார்கள். கனடா, அவர்களை அகதிகளாக ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தது. டால்ஸ்டாய்க்கு நிம்மதியானது.

ஆனால், ஏழை விவசாயிகளான அவர்கள் எப்படி அத்தனை தூரம் பயணம் செய்து கனடாவை அடைவார்கள்? அவர்கள் போய்ச் சேர ஏது பணம்?

அதற்காகத்தான் டால்ஸ்டாய் 'புத்துயிர்ப்பு' நாவலை எழுத ஆரம்பித்தார். அதுவரை தான் எழுதும் எந்த ஒரு படைப்புக்கும் ஒரு பைசா கூட சன்மானம் வாங்காத டால்ஸ்டாய், அந்த நாவலை எழுதுவதாக அறிவித்ததும், கூடவே இன்னொரு அறிவிப்பையும் சேர்த்து வெளியிட்டார். 'இதை யார் வேண்டுமானாலும் தங்கள் பத்திரிகையில் வெளியிடலாம். ஆனால் கண்டிப்பாக இத்தனை பணம் கொடுத்தாக வேண்டும்.'

டால்ஸ்டாய் ஒரு நாவல் எழுதுகிறார் என்றால் உலகெங்கும் அதற்கு ஏராளமான வாசகர்கள் எப்போதும் உண்டு. ஆகவே பிரெஞ்சு, ஜெர்மனி, ஆங்கிலம், ரஷ்யன் உள்ளிட்ட நான்கைந்து மொழிப் பத்திரிகைகள், ஒரே சமயத்தில் அதனை வெளியிட முன் வந்தன. டால்ஸ்டாய் கேட்ட பணத்தையும் தர ஒப்புக் கொண்டன.

டால்ஸ்டாய் நாவலை எழுத ஆரம்பித்தார்.

ஒவ்வொரு அத்தியாயமாக அவர் எழுதி தன் ஏஜெண்ட் ஒருவருக்கு அனுப்புவார். அவர் பிரதியெடுத்து ஒவ்வொரு பத்திரிகைக்கும் அனுப்பி வைப்பார். அவர்கள் மொழி பெயர்த்து, ஏஜெண்டிடம் திரும்ப அனுப்புவர். அவர் சரிபார்த்து அனுப்பினால் பிரசுரமாகும். பிரசுரத்துக்கு முன்னர் ஒருமுறை டால்ஸ்டாய் ப்ரூஃப் பார்ப்பார்.



"நீங்க கொடுத்த மருந்து சீட்ல உள்ள மருந்து எந்தக் கடையிலயும் கிடைக்கல டாக்டர்."

"அடப்பாவி! பேனா எழுதுதான்னு பிரிஸ்கிருப்ஷன் சீட்டு பின்பக்கத்துல கிறுக்கிப் பார்த்ததுய்யா அது!"

- ஆ.ஆர். பூபதி

ப்ரூஃபில் ஏராளமான மாற்றங்கள் செய்வார். அந்த மாற்றங்கள் உடனடியாக நான்கு மொழிப் பத்திரிகைக்கும் தெரியப்படுத்தப்பட வேண்டும். அவர்கள் மாற்றங்களை ஏற்று, மொழிபெயர்ப்பில் திருத்தம் செய்து வெளியிட வேண்டும் என்று ஏற்பாடு.

ஆரம்பத்தில் எல்லாம்



"சட்டசபைல வெளிநடப்பு பண்றப்ப வேகமா போறீங்களே.. ஏன்?"
"காலைல வாக்கிங் போகவேண்ணா அந்தக் குறைய இதுல போக்கிக்குவேன்!"
- அம்பை தேவா

சரியாகத்தான் இருந்தது. ஆனால் போகப் போக இந்தச் சிக்கல் மிக்க ஏற்பாடு மேலும் மேலும் சிக்கல்கள் ஏற்பட வழிவகுத்தது. டால்ஸ்டாய் தன் இஷ்டத்துக்குத் திருத்தி அனுப்பும் ப்ரூஃப்களில், எது இறுதி வடிவம் என்பதே தெரியாத அளவுக்கு ஏகப்பட்ட வடிவங்கள் குவியத் தொடங்கிவிட்டன. பத்திரிகைகள் காலத்தில் வந்தாக வேண்டுமல்லவா? ஆகவே, தமது இறுதிக் கெடு சமயத்தில் கைக்குக் கிடைக்கும் ப்ரூஃபையே இறுதி வடிவமாக நினைத்து பிரசுரிக்கத் தொடங்கிவிட்டன.

ஆங்கிலத்தில் ஒரு மாதிரி வரும். பிரெஞ்சில் கொஞ்சம் மாறியிருக்கும். ரஷ்யனில் மொத்தமாகவே பிரதி மாறிவிட்டிருக்கும்.

எல்லோரும் மிகவும் குழம்பினார்கள். டால்ஸ்டாயோ, தன் நாவலைச் சாகடிக்கிறார்களே என்று கத்து கத்தென்று கத்தத் தொடங்கினார். அவரிடம் அனுமதி பெற்று வெளியிட்ட பத்திரிகைகள் தவிர, அனுமதி பெறாமலும் சில பேர் அந்நாவலைத் தங்கள் இஷ்டத்துக்குப் பிரசுரிக்க ஆரம்பித்தார்கள். ஆகவே, வாசகர்கள் மத்தியில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டது. புத்துயிர்ப்பு நாவலின் நிஜ வடிவம்தான் எது? அதைக் கண்டுபிடிப்பதே மிகப்பெரிய கஷ்டமாக இருந்தது.

டால்ஸ்டாயும் வாசகர்களும் மிகவும் மன வருத்தம் கொள்ளத்தக்க வகையில், சர்வநாசமாக அந்த நாவலைப் பத்திரிகைகள் வெளியிட்டு, ஒரு மாதிரி வெளியாகும்போதே இறுதிச்சடங்கு செய்து முடித்துவிட்டன.

மனத்தளவில் டால்ஸ்டாய் மிகவும் நொந்துபோனார். அவர் எழுதுவதையே கிட்டத்தட்ட நிறுத்திவிட்டிருந்த சமயம் அது. டுகோபார்ஸுக்கு உதவுவதற்காகத்தான் அந்த நாவலையே எழுதினார். ஆனால் விமரிசகர்கள் அதைப் பிடித்துக் கிழித்துவிட்டார்கள். இதைக்காட்டிலும் ஒரு மோசமான நாவலை டால்ஸ்டாயைத் தவிர யாராலும் எழுத முடியாது என்றெல்லாம் கிண்டல் செய்தார்கள்.

நாவல் தோல்விதான். அதனால் என்ன? டால்ஸ்டாயின் லட்சியம் நிறைவேறிவிட்டது. படாதபாடு பட்டு, பணம் சேர்த்து, டுகோபார்ஸை அவர் கனடாவுக்கு அனுப்பிவிட்டார்.

அந்த ஆயிரக்கணக்கான உயிர்களும் அவரைச் சாகும்வரை கடவுளாகத்தான் நினைத்தார்கள்.

நாவலாசிரியராக டால்ஸ்டாய் அந்த ஒரு நாவலில்தான் தோற்றார். ஆனால் ஒரு மனிதராக இன்றும் அவர் நினைக்கப்படுவதற்கு, அந்த நாவல்தான் காரணம்.

(தொடரும்)

புதுடெல்லியின் புகழ்பெற்ற ரேஸ் கோர்ஸ் ரோட்டின் பிரம்மாண்டமான பங்களா முன்பு வந்து நின்றார், அமெரிக்காவில் வசிக்கும் பிசினஸ் பெரும் புள்ளியான ஜான் ஹம்மண்ட். அவரது கையில் அந்த வீட்டுக்குரிய பத்திரம். அவரது முகத்தில் பெருமை. "மூணரை கோடி கொடுத்தாலும், பிரமாதமான பங்களா."

அடுத்த சில நிமிடங்களில் அங்கே பிசினஸ்மேனுக்கு கடும் அதிர்ச்சி.

அதிகாரிகள் விசாரித்தபோது, யாரோ ஒரு கில்லாடி ஆசாமி, இந்தப் பயங்கர மோசடியைச் செய்திருக்கும் விஷயம் அம்பலமானது. என்ன நடந்தது? ஜான் ஹம்மண்டே கூறுகிறார்...

"டெல்லியில் எனது ஆபீஸ் ஆரம்பிக்க நல்லதொரு இடம் பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், ஒரு இணைய தளத்தில், டெல்லி ரியல் எஸ்டேட் சம்பந்தமான விளம்பரங்களைப் பார்த்தேன். இருபத்தி நாலு மணி நேர மின்சார வசதி, தண்ணீர் உட்பட பல்வேறு சிறப்பு அம்சங்கள் பட்டியல் போடப்பட்டு, இந்த பங்களாவின் புகைப்படமும் இடம் பெற்றிருந்தது. யாரோ ஒரு செல்வந்தரின் பங்களா என்று நினைத்து, அதை வாங்க என் விருப்பத்தைத் தெரிவித்தேன். ஆறு மாத காலம் ஈ-மெயிலிலேயே கடிதப் போக்குவரத்து நடந்தது. கடைசியில் மூணரை கோடிக்கு விலை முடிவானது.



# விற்பனையான பிரதமர் வீடு!

வந்த ஒரு பாதுகாப்பு அதிகாரி, ஜானை யார், என்ன விஷயம் என்று விசாரிக்க, "நான் அமெரிக்கப் பிரஜை. பிசினஸ் மேன். டெல்லியில எனது பிசினஸ் அபிவிருத்திக்காக இண்டர்நெட் மூலம் இந்த பங்களாவை வாங்கி இருக்கிறேன்" என்று ஜான் சொன்னதும், பாதுகாப்பு அதிகாரி முகத்தில் ஒரே குழப்பம். காரணம், அந்த அமெரிக்க மனிதர் வாங்கியிருப்பதாகச் சொன்ன ரேஸ்கோர்ஸ் பங்களா, இந்தியப் பிரதமரின் இல்லம்!

பாதுகாப்பு அதிகாரி, "இது இந்தியப் பிரதமர் மன்மோகன்சிங்கின் இல்லம். இந்திய அரசாங்கத்துக்குச் சொந்தமானது. இதை விற்க எந்தத் தனிநபருக்கும் உரிமை இல்லை. உங்களை யாரோ ஏமாற்றி இருக்கிறார்கள்" என்றதும், அமெரிக்க

கேமான் தீவில் உள்ள ஒரு வங்கியில் இருக்கும் குறிப்பிட்ட எண் கொண்ட கணக்கில் மூணரை கோடி ரூபாயைச் செலுத்திவிடும்படி தகவல் வந்தது. பணத்தை அந்தக் கணக்கில் செலுத்தினேன். அடுத்த சில நாட்களில் விற்பனைப் பத்திரம் என் கைக்கு வந்து சேர்ந்தது. வாங்கிய பங்களாவைப் பார்ப்பதற்காகவும் டெல்லியில் ஆபீஸ் திறப்பது சம்பந்தமான வேலைகளைக் கவனிக்கவும் வந்துள்ளேன்! இப்போதுதான் என்னை யாரோ ஏமாற்றிவிட்டது புரிகிறது" என்கிறார்.

டெல்லி போலீஸ், வழக்கினை பதிவு செய்து, புலன்விசாரணை செய்து வருகிறது.

**- எஸ். சந்திரமௌலி**



18.5.2005 முதல்

24.5.2005 வரை

# நடக்குமென்பார்: நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** இந்த வாரம் சிறப்பாக இருக்கும். வாக்கு, தனம், கல்வி மேன்மை பெறும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் காத்திருக்கிறது. புதிய தொழில் செய்ய ஆரம்பிப்பவர்கள் மனைவி பெயரில் செய்யவும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் கை கூடும். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு ஏற்படும். உடல் நிலை சீராகும். கலைஞர்களுக்கு ஏற்றம் காணும் வாரம்.

**ரிஷபம்:** தொட்டது எல்லாம் வெற்றி கிட்டும். குழந்தைகளுக்கு நல்லது நடக்கும். மாணவ மணிகளுக்கு நல்ல ரிசல்ட் காத்திருக்கிறது. உத்தியோகஸ்தர்களுக்கு ஊதிய உயர்வு, பணி உயர்வு ஏற்படும். புதிய வேலைக்கு முயற்சி செய்பவர்களுக்கு வேலை வீட்டுக் கதவைத் தட்டும். கலைஞர்கள் ஏற்றம் காண்பார்கள்.

**மிதுனம்:** நற்பலன் மிகுந்த வாரம். குழப்பங்கள் தீர்ந்து போகும். உயர் கல்விக்கு முயற்சி செய்பவர்களுக்கு நல்ல காலம். திருமணம் ஆகாத ஆண் / பெண்களுக்குத் திருமணம் கைகூடும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும்.

**கடகம்:** சுப செலவு ஏற்படும் வாரம். மதிப்பு கிட்டும். தெய்வ பலம் கூடும். தூர தேசப் பிரயாணம் ஏற்படும். நண்பர்கள், பார்ட்னர்கள் விலகிச் செல்வார்கள். எதிர்ப்பு குறையும். மாணவ, மாணவியருக்குத் தமது லட்சியம் நிறைவேறும்.

**சிம்மம்:** செல்வாக்கு மிகுந்து காணப்படும். எதிலும் வெற்றிதான்.

பேச்சில் நிதானம் தேவை. தன வரவுக்கு குறைவு வராது. குடும்பத்தில் நல்லது நடக்கும். உத்தியோகத்தில் பணி உயர்வு, இடமாற்றம் கிட்டும். வியாபாரிகளுக்கு பண வரவு இருக்கும். உறவினர்களிடம் கருத்து வேற்றுமை வரலாம். ஆஞ்சநேயர் தியானம் செய்யவும்.

**கன்னி:** சுமாரான வாரம். மனக் குழப்பங்கள் வரும். கணவன் மனைவிக்குள் அனுசரனை தேவை. எதிலும் அகலக் கால் வைக்க வேண்டாம். ஆரோக்கியத்தில் கண்ணும் கருத்துமாக இருக்கவும். உத்தியோகத்தில் நெருக்கடிதான் இருக்கும். வேறு வேலைக்குச் செல்ல வேண்டாம். புதிய தொழில் முயற்சியைத் தள்ளி போடவும். வண்டி / வாகனத்தில் செல்லும்போது எச்சரிக்கை தேவை. சனி / ராகு / கேது / குரு வழிபாடு அவசியம்.

**துலாம்:** வீட்டில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். நண்பர்கள் உறவினர்கள் வழியில் நற்பலன் ஏற்படும். ஆடம்பரப் பொருட்கள் சேரும். மாணவ, மாணவியர்க்கு நல்லது நடக்கும். வியாபாரிகளுக்கு ஏற்றம் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம், பணி உயர்வு ஏற்படும். எதிர்ப்பு மறையும். சகோதரர் வழியில் நற்பலன் ஏற்படும். நீண்ட நாள் பிரச்னை முடிவுக்கு வரும்.

**விருச்சிகம்:** வண்டி / வாகனத்தில் செல்லும்போது எச்சரிக்கை தேவை. குடும்பத்தில் நல்லது நடக்கும். திருமணம் ஆகாத ஆண் / பெண்களுக்குத் திருமணம் கைகூடும். பண வரவு பெருகும். மாணவ, மாணவியர் நல்ல மதிப்பெண் பெறுவார்கள். கலைஞர்களுக்குச் சிறப்பான வாரம். தாயாரின் உடல்நிலை சீராகும்.

**தனுசு:** சுமாரான வாரம். வேலை மாற்றம் ஏற்படும். புதிய பணி முயற்சி செய்பவர்களுக்கு வேலை கிடைக்கும். கணவன் மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. புதிய தொழில் முயற்சியைத் தள்ளிப் போடுவது நல்லது. மாணவ மாணவியர்க்கு நற்பலன் கிடைக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. ஆஞ்சநேயர் கோவில் சென்று வரவும். குரு வழிபாடு செய்து வரவும். ராகு / கேது வழிபாடு அவசியம்.

**மகரம்:** பட்டம் பதவி தேடி வரும் காலம். வழக்கு வெற்றி காணும். குடும்பத்தில் குதூகலம் ஏற்படும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கை கூடும். சிலருக்குப் புத்திர பாக்கியம் ஏற்படும். சிலர் அயல்நாடு செல்வார்கள். மாணவ, மாணவியர் நல்ல ரிசல்ட் எதிர்

## பரத்வாஜ் பதில்கள்

**• எனக்கு இரண்டு மகன்களும் ஆறு பெண்களும் இருக்கிறார்கள். என் சொத்துகளை விற்று பெண்களுக்கும் சேர்த்து பாகப்பிரிவினை செய்யலாம் என்றால், மகன்கள் எதிர்க்கிறார்கள். சஞ்சலத்துடன் இருக்கிறேன். என் குழப்பம் தீருமா? பெண்களுக்கு நல்ல எதிர்காலம் உண்டா? என் இறுதிக்காலம் எப்படி?**

**- என்.ஆர்.நடராஜன், திருச்சி - 12**

உங்களது ஆயுள் பாவம், தீர்க்கமாக இருக்கிறது. தற்போது நடக்கும் சனி தசையால் குழப்பநிலை நீடிக்கிறது. 25.2.2007க்குப்பின் நிலைமை மாறும். சஞ்சலங்கள் தீரும். குழந்தைகளுக்கு நல்ல வழி பிறக்கும். ஆஞ்சநேய ஸ்வாமியை வழிபட்டு வரவும்.

**• என் மகனுக்கு 11.6.2000-ல் திருமணமானது. இதுவரை குழந்தை பாக்கியம் இல்லை. விரதங்களிலும் கோயில் தரிசனங்களிலும் பயனில்லை. குழந்தை பாக்கியம் கிடைக்குமா? பரிகாரம் ஏதும் தேவையா?**

**- பி.ஆர்.கோபாலகிருஷ்ணன், ஸ்ரீ ரங்கம்**

உங்கள் மகனுக்கு குழந்தை பாக்கியம் நிச்சயம் உண்டு. பரிகாரம் தேவையில்லை.

**● என் கணவருக்கு தாழ்வு மனப்பான்மை உண்டு. எங்கள் ஒரே மகன் தினமும் அடியும் திட்டும் வாங்குகிறான். நிம்மதி அறவே இல்லை. இந்த நிலை மாறுமா?**

**- சுதா,**
**சென்னை - 18**

உங்கள் கணவரது ஜாதகப்படி சனிதசை 2007 வரை நடக்கும். அவரது ஜாதகம் அயல்நாட்டு வேலை வாய்ப்புள்ள ஜாதகம். 2007 வரை பொறுமை அவசியம். பிறகு நிலைமை சீர்படும். குழந்தைக்கும் நல்ல எதிர்காலம் உண்டு. கவலைப்பட வேண்டாம். ஆஞ்சநேயர் வழிபாடு நலம் சேர்க்கும்.

**● கடந்த 28 ஆண்டுகளாக வலிப்பு நோயால் அவதிப்பட்டு வருகிறேன். என் துன்பம் எப்போது தீரும்?**

**- என். சந்திரசேகரன்,**
**சென்னை - 92**

உங்கள் ஜாதகத்தில் காலசக்கர தசைகள் சரிவர நடக்கவில்லை. பிரார்த்தனை ஒன்றே குணமாக ஒரே வழி. ஆஞ்சநேய காயத்ரி மந்திரம் ஜபித்து வரவும். நோய் தானாக போய் விடும்.

**● எனக்குப் பூர்விகச் சொத்து கிடைக்குமா? நான் அரசியலில் ஈடுபடலாமா? என் சொந்த ஊரில் வீடு கட்டலாமா?**

**- என்.பி.டி. செல்வன்,**
**தோஹா, கத்தார்**

பூர்விகச் சொத்து கண்டிப்பாய் கிடைக்கும். அரசியல் வேண்டாம். பெரிய நகர்ப்புறங்களில் 2006ல் வீடு கட்டுவீர்கள்.

**● எனக்கு நல்ல வேலை எப்போது கிடைக்கும்? மேற்படிப்பு சாத்தியப்படுமா?**

**- தி.பாலசுப்ரமணியன்,**
**முடிவைத்தானேந்தல்**

உங்களுக்கு உயர்கல்வி வாய்ப்பு நிறைய இருக்கிறது. 26.8.2005 முதல் நல்ல காலம். வெளிநாட்டு தனியார் நிறுவன வேலை கிடைக்கும். முயற்சி கைவிட வேண்டாம். துர்கை வழிபாடு நலம் சேர்க்கும்.

**●ஆடி மாதத்தில் கருவுற்று சித்திரையில் குழந்தை பிறந்தால் கெடுதலா? ஏன் ஆடி மாதத்தில் தம்பதிகளைப் பிரிக்கிறார்கள்?**

**- சிந்தாமணி,**
**மதுரை**

சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில் குழந்தை பிறந்தால் தகப்பனாருக்கு ஆகாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. சித்திரை மாதத்தில் மற்ற நாட்களைப் பற்றி ஒன்றுமில்லை. சித்திரை செவ்வாயின் நட்சத்திரம். உஷ்ணாதிக்கம் கூடுதலாய் இருப்பதாலும் அக்னி நட்சத்திரமும் வருவதாலும் சித்திரை மாத குழந்தைப் பிறப்பைத் தவிர்க்க முன்னோர்கள் ஆடி மாதத்தில் தம்பதிகளைப் பிரித்தார்கள்.

பார்க்கலாம். கலைஞர்கள் ஏற்றம் பெறுவர். வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிட்டும். தெய்வ தரிசனம் கிடைக்கும்.

**கும்பம்:** சற்று குழப்பமான வாரம். வாக்குவாதம் வேண்டாம். குடும்பத்தில் கணவன் மனைவிக்குள் ஒற்றுமை தேவை. நெருங்கிய உறவினர் / நண்பரால் மனக் கசப்பு ஏற்படும். கைப் பொருள்கள் மீது கவனம் தேவை. ஆரோக்கியத்தில் கவனம் தேவை. சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு இடம் மாற்றம் ஏற்படும். வியாபாரிகள் கவனமுடன் தொழில் செய்வது நல்லது. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. சனி குரு வழிபாடு செய்து வரவும்.

**மீனம்:** திருமணக் காரியம் கைகூடும். மாணவ / மாணவியர் நல்ல மதிப்பெண் பெறுவார்கள். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். புதிய தொழில் செய்யும் எண்ணத்தைச் சற்று தள்ளிப் போடவும். தாயாரின் உடல்நிலையில் கவனம் தேவை. எதிலும் குழப்பம் வேண்டாம். தீர ஆலோசித்த பிறகு முடிவு எடுக்கவும். கலைஞர்கள் ஏற்றம் காண்பர். சிலருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வரும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். ராகு கேது / சனி வழிபாடு அவசியம்.

# இளமை கல்கி



சில சமயம் இந்த ஆராய்ச்சியாளர்கள் உருப்படியான சில ஆராய்ச்சிகளையும் செய்து விடுகிறார்கள். சாம்பிளுக்கு ஒன்று. கண்ணாடி பார்க்கும் 10 பெண்களில் 8 பேருக்குத் தன் பிம்பத்தின் மீது முழு திருப்தி ஏற்படாதாம். (மற்ற இரண்டு பேருக்கு க்வாட்டர் அல்லது செமி-க்வாட்டர் திருப்தி ஏற்பட்டிருக்கும் போலும்) "ஆக்ச்சுவலா இந்த ஐ ப்ரோவை கொஞ்சம் திக்கா, கொஞ்சம் லைட்டா, கொஞ்சம் சாஃப்ட்டா, கொஞ்சம் மீடியமா ஆல்டர் செஞ்சா இன்னும் கொஞ்சம் நல்லாயிருக்குமே" என்று கண்ணாடியைப் பார்த்து பார்த்து கொஞ்சிக் கொண்டேயிருப்பார்களாம்.

ஆனால், ஆண்கள் ரொம்பச் சமர்த்தாம். மஞ்சள் சட்டையும் டாலடிக்கும் டார்க் பச்சை பேண்ட்டும் போட்டுக் கொண்டு கண்ணாடி முன்னால் நின்றால் கூட 'இட்ஸ் ஓ.கே' என்று தோளை குலுக்கிக் கொண்டு கண்ணாடிக்கு டாட்டா காட்டிவிடுவார்களாம்!

"கண்ணாடி பார்த்தால் என்னவாம்?" என்று முணுமுணுப்பவர்களுக்குச் சுடச் சுட ஒரு நியூயார்க் எச்சரிக்கை ரிப்போர்ட் இதோ.. 'நீண்ட நேரம் கண்ணாடி முன்பு தவம் இருப்பவர்களுக்கு ஞாபக மறதி நோய் வந்து விடுகிறது. அது மட்டுமல்ல, அவர்களுக்கு ரொம்ப சீக்கிரம் வயதாகி விடுகிறது.' (அந்த ஆராய்ச்சியாள

---

# இன்னொரு பெங்கால் டைகர்

முப்பத்திரண்டு வெள்ளைக் கட்டங்கள், முப்பத்திரண்டு கறுப்புக் கட்டங்கள், முப்பத்திரண்டு கறுப்பு-வெள்ளைக் காய்கள். 'நிலமெல்லாம் ரத்தம்' சிந்தாமல் சிறு சத்தங்கள் மட்டும் எழும்ப ஒரு யுத்தம்! அட... சதுரங்கம்தான்! சதுரங்கத்தில் சாதுர்யமான, சக்தியுள்ள காய் எது? ராணிதான்.

இந்தப் பெண்ணும் ஒரு ராணிதான். சதுரங்க ராணிகளைச் சாதுர்யமாகக் கையாளும் ராணி. பெயர் நிஷா டொஹோட்டா! பெங்கால் தேசத்திலிருந்து இன்னொரு புலி!

"சின்ன வயசுல எனக்கு இருந்த ஒரே விஷயம், இந்தியாவின் முதல் பெண் கிராண்ட் மாஸ்டர் ஆகணும் என்பதுதான். ஆனா விஜயலட்சுமி இந்தியாவின் முதல் பெண் கிராண்ட் மாஸ்டர் பெருமையைத் தக்க வைச்சுக்கிட்டாங்க. சரி... ஓ.கே... இரண்டாவதா நான் ஆகணும்னு நினைச்சேன்... ப்ச்... அதுக்கும் சான்ஸ் தராம கோனேரு ஹம்பி ஆயிட்டாங்க. அடடா... அட்லீஸ்ட் மூணாவது இடமாவது நமக்கானதா இருக்காதான்னு ஏங்கினேன். ஆனா, உங்க ஊர்ப் பொண்ணு ஆர்த்தி அகர்வால் அந்த இடத்துல உட்கார்ந்துட்டாங்க! அதுவரை எனக்கான நாலாவது இடம் காத்துக்கிட்டு இருந்தது. நான் இப்போ இந்தியாவின் நான்காவது பெண்கள் செஸ் கிராண்ட் மாஸ்டர்" - தன் முப்பத்திரண்டு வெள்ளைக் கட்டங்களை... ஸாரி பற்களைக் காட்டிச் சிரிக்கிறார் நிஷா!

நான்காவது கிராண்ட் மாஸ்டராக மாறினாலும், இந்தப் பெண் புலி தற்போது 32 அடி பாய்ந்து, எல்லா கிராண்ட்

# கேன் ஐ சீ யூ கண்ணாடி?

ரின் பெயரைச் சொல்லுங்கள். அவர் பெயருக்கு ஓர் அபிஷேகம் செய்ய வேண்டும் என்று நிறைய ஆண் வாசகர்கள் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.)

அதற்காக 'அந்த நியூயார்க் புண்ணியவான்தான் சொல்லிவிட்டாரே' என்று ஷேவிங் செய்யும்பொழுது கூட கண்ணாடி பார்க்காமல் இருப்பது டூ மச். ஆனால் ஈ-மெயில் செக் செய்யும் பொழுது, வெண்டைக்காய் நறுக்கும் பொழுது, பேப்பர் படிக்கும்பொழுது, கடுகு தாளிக்கும்பொழுது, பால் கவர் வாங்கும்பொழுது, துணி காயப்போடும் பொழுது என்று கண்ணாடியின் அவசியம் அவ்வளவாக தேவைப்படாத சமயங்களில் கண்ணாடி பக்கம் போகாமலேயே வேலை செய்ய சிரமப்பட்டு பழகிக் கொள்ளலாம். "அதற்கு முன்பு ஒரு நிமிஷம், ஒரே ஒரு நிமிஷம் கண்ணாடியைப் பார்த்துக்கறேன்" என்று சொலகிறீர்களா? அதுவும் சரிதான்.

ஒரு கொசுறு நியூஸ்: பூனை, நாய், வரிக்குதிரை, டினோசர், ஒட்டகச்சிவிங்கி உட்பட எந்த விலங்குகளுக்கும் கண்ணாடியில் காண்பது தன்னுடைய உருவம்தான் என்று தெரியாதாம். (கொடுத்து வச்ச பிராணிகள்).

கண்ணாடிக்குச் சில சமயம் ஞாபகம் இருக்குமாம். ரஷ்யாவில் ஒரு தம்பதி ஒரு புது பளபளா கண்ணாடி ஒன்று வாங்கி அவர்கள் பெட்ரூமில் வைத்தார்களாம். அன்று இரவு அவர்களுக்குக் கனவு. அதில் வீடு பற்றி எரிவது போல. அதற்குப் பின்பு ஏதோ ஒரு கசாமுசாவாலஜி எல்லாம் பார்த்துவிட்டு கண்ணாடியைக் கொண்டு போய் வேறு அறைக்கு மாற்றினார்கள். ஆச்சரியம், கனவு நின்றுவிட்டது? பிறகு அந்தக் கண்ணாடியை இவர்களுக்கு விற்ற பாட்டியை பார்த்துக் கேட்டால், உலகப் போரின்போது அந்தக் கண்ணாடி இருந்த அறையில் ஒரு விபத்து ஏற்பட்டதாய்ச் சொன்னாராம்.

- சுங்கா

---



மாஸ்டர்களையும் தூக்கிச் சாப்பிட்டு, சென்ற வாரம் இந்தியாவின் 31வது தேசிய பெண்கள் 'ஏ' சாம்பியன் பட்டத்தை வென்றிருக்கிறது.

"என் தங்கச்சியும் செஸ் ப்ளேயர்தான். அவகூடத் தான் செஸ் விளையாட ஆரம்பிச்சேன். சூப்பரா விளையாடுவா! என்னை ஈஸியா தோற்கடிப்பா. ஆனா இப்ப அவளை ஜெயிக்கக் கத்துக்கிட்டேன்" என்று தன் தங்கையைச் சீண்டும் நிஷா, எல்.ஐ.சி. அணியில் இருக்கிறார். 'இந்த வெற்றி நான் மேலும் உயர ஏணிகளைத் தந்திருக்கிறது' - நம்பிக்கையுடன் சிரிக்கிறார் நிஷா!

- முகில்

# இளமை கல்கி



• ஸ்ரீதர் (நடுவில் இருப்பவர்)

**‘ம**ச்சான் பேரு மதுர...’ ‘லஜ்ஜா வதியே... என்ன அசத்துற ரதியே...’ என்று பல பாடல்களுக்கு ஹீரோ, ஹீரோயினோடு நம்மையும் துள்ளாட்டம் போட வைத்தவர் டான்ஸ் மாஸ்டர் ஸ்ரீதர். பிளாக் & ஒயிட் ஹேர், காதில் வளையம் என்று அல்ட்ரா மாடர்ன் கோரியோகிராஃபரான இவருடன் ஒரு ஹேண்ட்ஸம் சாட்...

**குவாலிஃபிகேஷன் :**

ராப், பாலே, டேங்கோ, ட்ரெடிஷனல் ஃபோக், இந்தியன் ஃபோக் என்று ஒரு டான்ஸருக்குத் தேவையான எல்லாவித டான்ஸையும் கத்து வச்சிருக்கேன். இதை விட முக்கியமான விஷயம் இன்னும் புதுப்புது டான்ஸ் கத்துட்டு இருக்கேன்.

**ஆட்ட ரகசியம் :**

ராஜு சுந்தரம் மாஸ்டர்கிட்ட அசிஸ்டெண்டா இருந்தது. அஞ்சு வருஷம் குரூப் டான்ஸரா இருந்தது. பாடி மெயின்

**ஷா**ருக்கான்-கஜோல் நடிப்பில் எந்த சினிமா ரசிகராலும் மறக்க முடியாத அழகான செலுலாய்டு சித்திரம் ‘தில்வாலே துல்ஹானியா லே ஜாயிங்கே’. இந்தப் படம் சத்தமில்லாமல் ஒரு அசாத்திய சாதனையை கடந்த வாரம் நிகழ்த்தியிருக்கிறது.

1995ம் வருடம், அக்டோபர் 25ம் தேதி ரிலீஸான ‘தில்வாலே...’, தற்பொழுது மும்பையிலுள்ள மராத்தா மந்திர் எனும் திரையரங்கில் தனது 500வது வாரத்தை வெற்றிகரமாகக் கடந்துள்ளது. யெஸ்... கடந்த 10 வருடங்களாக ஒரே தியேட்டரில் ஓடிக் கொண்டிருக்கிறது இப்படம்.

எப்படி... எப்படி... இது சாத்தியம்?

“இந்தப் படத்தை நல்லாயில்லைன்னு ஒருத்தர்கூட சொல்ல முடியாதுங்க. நூறு தடவைக்கும் மேல் பார்த்தவர்களெல்லாம் உண்டு. ஷாருக் - கஜோல் ஜோடி, இனிமையான பாடல்கள், எத்தனை முறைப் பார்த்தாலும் ஒவ்வொரு முறையும் புதிதாகத் தோன்றும் காதல் காட்சிகள் இதெல்லாம்தான் காரணம்” என மெய் சிலிர்க்கிறார் மராத்தா மந்திர் திரையரங்கின் மேலாளர் ரானே. இத்திரையரங்கம் மும்பை சென்ட்ரல் ரெயில் நிலையம் மற்றும் பஸ் டிப்போ அருகில் இருப்பதால், பஸ்ஸோ, ரயிலோ கிடைக் காதவர்கள் மூட்டை முடிச்சுகளோடு மராத்தாவுக்குள் நுழைந்து விடுகிறார்கள். டிக்கெட் விலையும் மிகக் குறைவாக இருப்பதால் (பால்கனி ரூ.20), மும்பை ரசிகர்கள் தொடர்ந்து படத்தைப் பார்த்து வருகிறார்கள்.

இந்தி திரையுலகில் ‘ஷோலே’ படம் ஐந்து வருடங்கள் ஓடியதுதான் இதுவரை ரெகார்டாக இருந்தது. அதைத் தற்பொழுது ‘தில்வாலே’ முறியடித்துள்ளது. சினிமா விமர்சகர்களின் கணிப்புப்படி எப்படியும் இந்தப் படம் அறுநூறு வாரம் ஓடும் என்பதால், வெகுவிரைவில் ‘தில்வாலே’ டீம் ஒரு பிரம்மாண்ட விழாவுக்கு ஏற்பாடு செய்யவிருக்கிறார்களாம்.

# பத்து வரு

# "ஹீரோவாகப் போறேன்!"

டனென்ஸ், தொடர்ச்சியான பிராக்டீஸ் இப்படி நிறைய சொல்லலாம்.

**ஹோம் ஒர்க் :**

'எனக்குன்னு தனியா டான்ஸ் ஸ்டுடியோ இருக்கு. அங்கதான் ஒவ்வொரு பாட்டுக்கும் டான்ஸ் மூவ்மெண்ட்ஸை கம்போஸ் பண்ணுவேன். அந்த ரூம்ல தான் நான் விஜய்யா, அஜித்தா, சிம்புவா, தனுஷா, பரத்தா மாறி, மாறி ஆடிட்டு இருப்பேன். அதுதான் அப்படியே ஸ்க்ரீன்ல வரும்.

**ஆசை :**

நிறைய படங்களுக்கு ஒர்க் பண்ணியிருந்தாலும் ஒரு படத்துல வர்ற எல்லாப் பாட்டுக்கும் நானே கோரியோகிராஃபி பண்ணணும்னு ஆசை. காதல் படத்துக்கு அப்படித்தான் புக் பண்ணினாங்க. ஆனா அது நடக்கல. இப்போ 'அழகாய் இருக்கிறாய், பயமாய் இருக்கிறது' படத்துக்கும் அதே மாதிரி புக் பண்ணியிருக்காங்க. பார்ப்போம்.

**வருத்தம் :**

சீனியர் ஹீரோக்கள் என்னை மாதிரி யூத்தான மாஸ்டர்ஸை யூஸ் பண்றதில்ல. அவங்களுக்குப் பிடிச்ச, பழக்கப்பட்ட மாஸ்டர்ஸை யூஸ் பண்ணிடறாங்க. அவங்ககிட்ட இருந்தும் புதுப் புது மூவ்மெண்ட்ஸை எங்களால கொண்டு வரமுடியும். இட்ஸ் ஓ.கே.

**கனவு :**

பிரபுதேவா சார் டான்ஸ் மாஸ்டரா இருந்து ஹீரோவாகி, இப்போ டைரக்டராகவும் ஆயிட்டாரு. அதேபோல எனக்கும் ஹீரோ ஆசை இருக்கு. சீக்கிரமே என்னை ஹீரோவா பார்ப்பீங்க.

- முராரி

ஒருவேளை தமிழ்ப் படங்கள் போல் ஹீரோ காலரை தூக்கிக்கொள்வதற்காக வீம்புக்கு இத்தனை நாட்கள் ஓடுகிறதா என்றால் ஸாரி... இன்றைக்கும் மேட்னி ஷோவுக்கு அறுபது சதவீதம் தியேட்டர் நிறைகிறதாம். வாரக் கடைசியில் ஹவுஸ்ஃபுல்லாம்!

ஆபாசம் எதுவுமில்லாமல் இளமையான ஒரு படம் தந்தால் அதன் நினைவுகள் சந்தனமாய், காலத்திற்கும் மணக்கும் என்பதற்கு 'தில்வாலே' சிறந்த உதாரணம்.

- செந்தில்



ஜெட்டா டே!

# டோனி பிளேரின் சாதனை..?

* மக்கள் மதிப்பு!

● பி.பொன் இலக்கியா, மதுரை-16

? தேர்தல் களத்தில் ஒரு டஜன் அமைச்சர்களைக் குவித்துள்ளதே அ.தி.மு.க.?

! அதிகாரிகள் ஒரு வேளை பயப்படலாம்; அரசு இயந்திரத்தை ஆளும் கட்சிக்குச் சாதகமாகப் பயன்படுத்தலாம். (தேர்தல் கமிஷனை டபாய்த்துவிட்டு). ஆனால், மக்கள் பயப்பட மாட்டார்கள். அந்தக் காலம் போயாச்சு, போயாச்சு!

● சு. அபிராமி, ஆவணத்தாங்கோட்டை

? ஐஸ்வர்யா ராயை மணக்கப் போவதாக ஒருவழியாக அறிவித்துவிட்டாரே விவேக் ஓபராய்?

! உத்திரிணியிலிருந்து வந்தால்தானே தீர்த்தம்! ஐஸ் வாயே திறக்கலையே!



* 'சட்ட'திட்டம்!

● எம்.முருகேசன், சென்னை - 4

? 'சந்திரமுகி படத்தைப் பாராட்டிய மத்திய அமைச்சர் அன்புமணியைப் போன்ற நண்பர்கள் தேவை' என்று ரஜினிகாந்த் கூறியிருக்கிறாரே...?

! அப்படியே மிக மிக மோசமான இரட்டை அர்த்த வசனங்களைக் கண்டிக்கும் நண்பர்களும் தேவை என்றும் அவர் கூறியிருக்கலாம்!

● தெ.ச.சேகர், தென்கடப்பந்தாங்கல்

? தாரம் வந்த பிறகு தாயைப் புறக்கணிக்கும் சிலருக்குத் தங்கள் அறிவுரை என்ன...?

! 'பதவி வந்ததும் வாக்காளரைப் புறக்கணிக்கும் எம்.எல்.ஏக்களை நினைத்துப் பாருங்கள்; திருந்துவீர்கள்' என்பதுதான்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'ரகு, சுந்தரேச அய்யர் உள்ளிட்டவர்களை குண்டர் சட்டத்தில் கைது செய்தது செல்லாது' என்று சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளதே?

! இப்போது, 'கஞ்சா வழக்கு சுந்தரேச அய்யர், ரகு மீது போடவே இல்லை' என்று போலீஸ் ஜகா வாங்குவது இந்தத் தீர்ப்பின் பலனாக இருக்கலாம்!

● எஸ்.எம்.ஷாஜஹான், திருநெல்வேலி-5

? அணுசக்தி விஞ்ஞானி அப்துல்

கலாம் கண்டுபிடிப்பு என்ன...? சுருக்கமாகச் சொல்லுங்கள்.

! ஏவுகணைகளை விண்ணில் செலுத்தும் தொழில்நுட்பத்தைக் கச்சிதப்படுத்த முன் நின்றவர். இதன் மூலம் அயல்நாடுகளை எதிர்நோக்கும் நிலை மாறி இந்தியா சுயபலம் பெற்றது. செலவு வெகுவாகக் குறைந்தது.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? நடிகை முதல் ஏழுமலையான் வரை பலரையும் ஏமாற்றி, பலகோடி வரை மோசடி செய்துள்ளாரே தனிநபர் ஆதிகேசவன்...?

! தனி நபராக இருந்ததுதான் தப்பாப் போச்சு; அரசியலிலும் கூடவே இறங்கியிருந்தால் இத்தனை இலகுவாகச் சிக்கியிருக்க மாட்டார்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம் ❒

? மூன்றாவது முறை



● கனவுக் கணை!



● கேளாத...



● ...மேளம்!

# நீங்கள் கேட்டவை-தராசு

யாக பிரிட்டிஷ் பிரதமராக ஆகியிருக்கும் டோனி பிளேரின் சாதனை வெற்றி குறித்து...?

! வெற்றி என்றபோதிலும், பிளேர் கட்சிக்கு வெற்றியைத் தந்த வாக்கு வித்தியாசம் கடந்த தேர்தலைக்காட்டிலும் கணிசமாகக் குறைவு. இதை பிளேரே ஏற்று ஈராக் விஷயத்தில் மக்கள் தமக்குப் பாடம் புகட்டியிருப்பதாகக் கூறியுள்ளது, அவர் மக்கள் கருத்தில் வைத்துள்ள மதிப்பின் அடையாளம்.

● ஜே.துரைராஜ், சென்னை - 116

? இந்தியாவின் செயற்கைக்கோள் பி.எஸ்.எ.வி-6 ஸ்ரீஹரிகோட்டாவிலிருந்து ராஷ்டிரபதி அப்துல் கலாம் முன்னிலையில் வெற்றிகரமாகச் செலுத்தப்பட்டது குறித்து...?

! பழகிவரும் பெருமிதமாக இந்த ஏவுகணை வெற்றிகள் மாறுவதுகூட நமக்குப் பெருமைதான். அத்தகைய தருணத்தில் கலாம் இருந்தார்; விஞ்ஞானிகளைக் கட்டித் தழுவிக் கொண்டார் என்பது கூடுதல் மகிழ்ச்சி.

● எஸ்.ஈ.வி. உதயன், சிலமலை

? 'திராவிட கட்சிகள் ஒன்றையொன்று பழிதீர்த்துக்



● இரும்புப் பிடி!



● செவாலியே சங்கீதம்!

கொள்கின்றன' என அத்வானி கூறுகிறாரே...?

! ஆமாம், ஆமாம்! ஆர்.எஸ்.எஸ்ஸும் பி.ஜே.பியும் போலத்தான்.

● அ.சுஹைல் ரஹ்மான்,
திருச்சி - 21

? காங்கிரஸ், சோனியாவின் முழுக் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்று அக்கட்சியின் பொருளாளர் மோதிலால் வோரா பேட்டி அளித்துள்ளது பற்றி...?

! சோனியாவின் முழுக் கட்டுப்பாட்டில் அதன் மூச்சு திணறுகிறது! கட்டுப்பாடுடன் உட்கட்சி ஜனநாயகம் செயல்பட்டால்தான் பெருமை.

● எஸ். ப்ரியதர்ஷினி,
திருநெல்வேலி - 7

? வழக்குகளை வெளி மாநிலங்களுக்கு மாற்றக் கோருவதில் என்ன சூட்சுமம் இருக்கிறது?

! 'ஒரு மாநிலத்தில், அரசியல் தலையீடு காரணமாக அரசுத் தரப்பு வழக்குரைஞர்களும் போலீஸும் நியாயமாக நடந்து கொள்ள மாட்டார்கள்; எனவே நீதி கிடைக்காது' என்று கருதப்படும் போது, வழக்கு வேறு மாநிலத்துக்கு மாற்றப்பட வேண்டும் என்ற கோரிக்கை எழுகிறது.

● கே.வி.ராமன்,
புதுடெல்லி-1

? பாலமுரளி கிருஷ்ணாவுக்கு ஃபிரான்ஸ் அரசு செவாலியே விருது வழங்கியுள்ளதே... இதை அடுத்து பாரத் ரத்னாவும் அவருக்கு வழங்கப்படுமா?

! செவாலியே விருது கிடைத்த வரையில் சந்தோஷமே. ஆனால், அது ஒன்றும் பாரத் ரத்னாவுக்கான படிக்கட்டு அல்ல.

● வீ.முத்தையா, திருநெல்வேலி

? வர வர அரசியல் கட்சிகள் தேர்தல் விதிமுறைகளை மீறிச் செயல்பட துணிந்திருப்பது 'தேர்தல் கமிஷனால் என்ன செய்துவிட முடியும்?' என்ற துணிச்சலில்தானே...?

! அதைவிடவும் முக்கியமான விஷயம், தேர்தல் நெறிமுறைகளைத்தான் கமிஷன் வகுத்திருக்கிறது; அவை சட்டமாக்கப் படவில்லை என்ற துணிவுதான்.

● டி.சுப்ரமணியன், மேலையூர் ●

? லல்லு பிரசாத் யாதவ் விஷயத்தில் ஆளும் காங்கிரஸ் கட்சியின் அணுகுமுறை என்னவாக இருப்பது நல்லது...?

! சட்டம் துரிதமாகத் தன் பணியை ஆற்ற வேண்டும், தீர்ப்பு வெகு சீக்கிரம் வெளியாக வேண்டும் என்ற அணுகுமுறை.

● கே.தெய்வசிகாமணி,
சென்னை -5

? கட்சி சார்ந்தவர்களால் நல்ல இலக்கியம் படைக்க முடியாது என்று இந்திரா பார்த்தசாரதி சொல்வதில் உங்களுக்கு உடன்பாடு உண்டா?

! கட்சியைச் சார்ந்திருப்பது வேறு; கொள்கை சார்ந்திருப்பது வேறு. கொள்கை சார்ந்திருப்பவர்கள் நல்லிலக்கியம் படைக்க முடியும் என்பதற்கு உலகின் எல்லா மொழிகளிலும் ஏராளமான எடுத்துக்காட்டுகள் உண்டு. இ.பா.வின் எழுத்துகளில் கூட இதைக் காணலாம். ○

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:
க.நா.ராஜேஸ்வரன்,
தெற்கு வீதி,
மொரட்டுப்பாளையம் - 638 752

● ரூ.50/- பரிசு பெறுபவர்:
டி.சுப்ரமணியம்,
மெயின்ரோடு,
மேலையூர் - 609 107




''நாலும் இருபது வருஷமா பார்க்குறேன்... இந்த பேங்க் வாசல்லயே பிச்சை எடுக்குறியே?''

''இந்த பேங்க்லதான் சாமி எனக்கு அக்கவுண்ட் இருக்கு!''

- மன்னை பி.ஆர்.பி.

''நீங்க சொன்னபடி வீட்டுல எல்லாப் பொருளையும் இடம் மாத்தி வச்சும்கூட கஷ்டப்படுறேனே ஜோசியரே...?''

''நான் கொடுத்த வாஸ்து புஸ்தகத்தை நீ சரியான இடத்துல வைக்கலீங்களே!''

- கிரிஜா மணாளன்



# இது ரொம்ப அநியாயம்!



''இது ரொம்ப அநியாயம்ங்க!''

''எதைச் சொல்றீங்க?''

''வீடியோல கல்யாண நிகழ்ச்சிகளை நிறுத்திட்டு 'மொய் பாக்கி' வச்சிருக்கறவங்க பட்டியலைக் காட்டறதைத்தான்!''

- கிரிஜா மணாளன்

''காந்தி தாத்தா ரூபா நோட்டில் ஏன் சிரிச்சுக்கிட்டு இருக்கார்?''

''அவர் அழுதால் நோட்டு நனைஞ்சிடும், ஸார்!''

- என்.எஸ்.பாலசுப்ரமணியன்



...இப்படி கேட்டுக் கொண்டே வருகிற பித்ரு தேவதைகள் இறுதியாக எதைக் கேட்கிறார்கள்...? ஒன்றுக்குமே சக்தியில்லாவிட்டால் போகிறது. அப்படி சக்தி இல்லாதவன், "நிராலம்பே! நிராகாசே' என்று ஊரை விட்டு வெளியே போய், 'அழுவான் தொழுவனே!' என்று ஆழ்வார் சொல்கிறாரே, அந்த மாதிரி ஆகாசத்தை நோக்கி இரண்டு கைகளையும் தூக்கி, "இன்றைய தினம் பித்ரு தினம். பித்ரு தேவதைகளை ஆராதிக்க சக்தியற்றவன், இதோ கையைத் தூக்கிச் சொல்கிறேன்... எனக்கு சக்தி இல்லை..." என்று தொழட்டும். "இந்த எனது செய்கையினாலேயே பித்ரு தேவதைகள் திருப்தி அடையட்டும்" என்று சொல்லி வேண்டட்டும்... இப்படி வேண்டக் கூடிய ஒருவனாவது எங்கள் குலத்தில் உதிக்க மாட்டானா?" என்று பித்ரு தேவதைகள் ஏங்குகின்றனர். 'இரண்டு கைகளையும் தூக்கி,

# குறையொன்றுமில்லை

''எனக்கு சக்தி இல்லை'' என்று சொல்வதற்குக் கூடவா 'உனக்கு சக்தி இல்லை?' என்று கேட்கிறார்கள்.

- இதையெல்லாம் பண்ணு என்று சொல்கிறது சாஸ்திரம். 'சக்தி இல்லை என்று சொல்வதற்குக் கூட சக்தி இல்லை' என, சாஸ்திரம் சொல்வதை பண்ண மறுத்தால், அதனால் வாழ்நாள் முழுவதும் சிரமப்படும்படியான நிலை ஏற்படும். குடும்பத்தில் பல கஷ்டங்கள் ஏற்படும். பித்ரு தேவதைகளின் அனுக்ரஹம் இல்லையானால், நமக்கு வாழ்வில் பூர்ணத்துவம் இல்லை.



# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

வஸு-ருத்ரா ஆதித்யர்களின் ஸ்வரூபமானவர்கள் பித்ரு தேவதைகள். இவர்களுடைய பரிபூரணமான அனுக்ரஹத்தைச் சம்பாதிக்க வேண்டும். நைமித்திக மான கர்மானுஷ்டானம், கிருஹண காலத்தில் பண்ணக்கூடிய தர்ப்பணம், அஷ்டகா-அன்வஷ்டக தர்ப்பணம், அமாவாசை அன்று பண்ணக்கூடிய தர்ப்பணம் இவையெல்லாம் விடாமல் பண்ணவேண்டும். இதற்கு நைமித்திகம் என்றால் ஒரு காரணத்தை உத்தேசித்து அந்த நாளிலே பண்ணக்கூடியது. இவை நித்ய கர்மானுஷ்டானம் அல்ல. அந்த மாதிரி நித்யம் பண்ணவேண்டியவை வேறு. இரண்டையும் பண்ணவேண்டும். அதற்கும் மேலே, ஆசிரம தர்மம் என்பது ரொம்ப முக்கியம். அதைக் கைவிட்டவன் வஸ்திரமில்லாதவனுக்குச் சமமாவான். அப்படிக் கைவிட்டவர்களைச் சாஸ்திரமானது அங்கீகரிப்பதில்லை. ஆகவே பித்ரு கர்மாவானது அதி முக்கியமானது.

இவ்வாறு யக்ஞ பிரகரணங்கள், வேதத்தால் எடுத்துக்காட்டப்பட்டு, கர்மாக்களும், நித்ய நைமித்திக விசேஷ காரியங்களும் விளக்கப்படுகின்றன. அத்தனை கர்மாக்களினாலும் ஆராதிக்கப்படக்கூடியவன் அவனே என்பதைத்தான் வேதம் எடுத்துக் காட்டுகிறது. சிரமப்பட்டு நாம் பண்ணக்கூடிய மஹா யக்ஞங்களில் ஆராதிக்கப் படக்கூடியவனும் அவன் ஒருவனே; அவனை எப்படிப்பட்ட மந்திரங்கள் எல்லாம் சொல்லி ஆராதிக்க வேண்டும் என்பதை வேதமானது ஆணித்தரமாக, விசேஷமாகச் சொல்கிறது.

அப்படிப்பட்ட வேத வான்மயத்தைப் பூரணமாக அத்யயனம் பண்ணி, அந்த யக்ஞ பிரகரணங்களையெல்லாம் நடைபெறச் செய்யத்தான் யக்ஞோபவீதத்தை நாம் தரிக்கிறோம். வேதத்தில் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட கர்மாக்களைப் பண்ணும் யோக்யதை நமக்கு அப்போதுதான் வாய்க்கிறது.

இப்படி பகவானை யக்ஞத்திலே சந்தோஷப்படுத்துவது உயர்ந்த



கர்மா; சிரேஷ்டமான கர்மா. இதனைச் செய்வதனால் என்ன பயன் என்பதையும் சொல்லியிருக்கிறது.

தியாகத்தினால்தான் நாம் அம்ருதத்வத்தை அடைய முடியும் என்கிறது உபநிஷத். தியாகம் என்றால் என்ன...? வஸ்து தியாகம் நமக்கு பகவானால் கொடுக்கப்பட்ட வஸ்துகளை பகவத் அர்ப்பணம் பண்ணுகிறோம்... அத்தனையும் பண்ணுவதில்லை. அடையாளமாக கொஞ்சம் பண்ணுகிறோம். அதைப் பகவான் அக்னியிலே ஏற்கிறான். அந்தத் தியாக புத்தி நம்மிடத்திலே இருக்கிறதா என்பதைத்தான் பகவான் எதிர்நோக்கிப் பார்க்கிறான். யக்ஞத்தின் மூலமாக இதைத்தான் எதிர்பார்க்கிறான். ஆகையினால்தான், கிடைத்த பொருளை யக்ஞத்தின் மூலம் நாம் பகவத் சமர்ப்பணம் பண்ணுகிறோம். வஸ்து தியாகம் எதற்காக கற்றுக் கொடுக்கப்படுகிறது? இந்த ஆத்மாவை பகவானுடையது என்று சமர்ப்பிப்பதற்கு உண்டான அந்த நிலையை நாம் அடைவதற்காகத்தான் வஸ்து தியாகமானது நமக்குக் கற்றுத்தரப் படுகிறது.

ஆத்ம தியாகம் சரணாகதி, சத்ம சமர்ப்பணம், பர ஸமர்ப்பணம் என்றெல்லாம் பெயர் அதற்கு... தியாகம் என்றால் என்னவென்று தெரிந்தால்தானே, ஆத்ம தியாகம் என்ற பெரிய காரியத்தை நாம் பண்ண முடியும்!

ஆத்ம சமர்ப்பணம் அல்லது ஆத்ம தியாகத்தின் படிப்படியான நிலைகளைப் பற்றிச் சொல்லுகிறபோது, அதற்கெல்லாம் ஆரம்ப நிலையான கர்மானுஷ்டானம் பற்றியும் நாம் கவனிக்க வேண்டும்.

வேதத்திலே, பூர்வ பாகத்திலே பெரிய யக்ஞங்களெல்லாம் சொல்லி, வஸ்து தியாகம் நமக்குக் கற்றுத்தரப்படுகிறது. உபநிஷத் பாகத்திலே ஆத்ம தியாகம் என்கிற உயர்ந்த தியாகம் கற்றுத் தரப்படுகிறது.

வஸ்து தியாகத்துக்குப் பூரண பலனை பகவான் கொடுக்கிறானா என்றால், கொடுக்கிறான். கட்டாயம் கொடுக்கிறான்.

வேதமே இந்தச் சந்தேகத்தை எழுப்பி, பதிலும் சொல்கிறது.

வேதத்திலே நிறைய எதிர்மறையான கேள்விகள் இருக்கின்றன. 3330 கேள்விகள் எதிர்மறையாக இருக்கின்றன - நாத்திக வாதமாக! வேதமே கேட்கிறது; கேட்டு, பதிலும் சொல்கிறது. ஆகையினாலே, இக்காலத்திலே தோன்றி வேதத்தைப் புதிதாகக் கேள்வி கேட்க வேண்டிய நிர்ப்பந்தமே இல்லை. எல்லா கேள்விகளையும் வேதமே கேட்டு, பதிலையும் சொல்லுகிறது. அந்த மாதிரி கேள்விகளை நம்மால் கேட்க முடியாது! அந்த அளவுக்குக் கேள்விகள்.

"அக்னியில் விஷ்ணுவைக் குறித்து யக்ஞம் பண்ணுகிறாயே... அதிலே வஸ்து தியாகம் பண்ணுகிறாயே... ஒரு உத்திரிணி நெய்யை எடுத்து விஷ்ணுவே ஸ்வாஹா என்றால் அது போதுமா?" என்று வேதம் கேட்கிறது. ஒரு கால விசேஷத்திலே ஒரு உத்திரிணி நெய்யை எடுத்துச் சேர்த்து விட்டால் அந்த விஷ்ணுவுக்கு அது போதுமா?

"உனக்கு நெய் வேண்டியிருக்கிறது என்றால் எவ்வளவு வேண்டியதாயிருக்கிறது? ஒரு நாளைக்கு எவ்வளவு? ஒரு வாரத்துக்கு? ஒரு வருஷத்துக்கு? ஒரு சம்வத்ஸரத்துக்கு...? - இப்படி எடுத்துக் கொண்டால் நிறைய நெய் பிடிக்கிறதே... ஒரு கால விசேஷத்திலே பகவானுக்குச் சமர்ப்பிக்கிறபோது, ஒரு உத்திரிணி சமர்ப்பித்தால் அது அவனுக்குப் போதுமா?" என்கிறது வேதம்.

"போதுமா தெரியவில்லையே!" என்கிறான் அந்த அத்வர்யு.

உடனே அடுத்த கேள்வியை வேதம் கேட்கிறது. "போதுமா என்று உமக்குத்

### தேறிவிட்டார்!

ஸ்டாலின் தனது தந்தை வழியில் இப்போது தினமும் யோகாசனப் பயிற்சி செய்து வருகிறார். சிரசாசனப் பயிற்சியில் நன்கு தேறிவிட்டதாக அவரது குருவே பாராட்டியதில் ரொம்பவே குஷியாக இருக்கிறார்.

தெரியவில்லை. இருந்தாலும் ஹோமம் பண்ணிக் கொண்டிருக்கிறீர். சரி; இது போய்ச் சேர்கிறது என்பதாவது உமக்குத் தெரியுமா?"

"அதுவும் தெரியலியே!" என்கிறார் ஹோமம் பண்ணுபவர்.

உடனே அவர் கையைப் பிடித்துக் கொள்கிறது வேதம். "போகிறதா இல்லையா என்பது கூட உனக்குத் தெரியவில்லை... இப்படி ஒன்றுமே தெரியாத ஒரு கர்மாவை, அஹோராத்ரம் நிர்ப்பந்தப்படுத்தப் பண்ணுகிறாயே நீ... எதற்காகப் பண்ணுகிறாய்?- அந்த எம்பெருமான் இவ்வளவு சிரமப்பட்டுப் பண்ணும்படியாகவா சொல்லியிருக்கிறான்? பெரிய காரியத்தைப் பண்ணுகிறாய், அஹோராத்ரம் பண்ணுகிறாய்... ஆனாலும் அது அவனுக்குப் போய்ச் சேர்கிறதா என்று தெரியவில்லை... இது வீணான காரியம். அதனால் ஒரு குடம் ஜலத்தைக் கொண்டு வந்து, இந்த ஹோம குண்டத்திலே சேர்த்துவிட்டு ஊருக்குப் போய்ச் சேரு" என்கிறது வேதம்!

வேத வாக்கியத்தைக் கேட்டுவிட்டு அவரும் ஒரு குடம் ஜலத்தைக் கொண்டு வந்துவிட்டார்! மறுபடியும் அவர் கையைப் பிடித்துக் கொண்டது வேதம்.

"இப்படி யக்ஞத்தை அணைக்கலாமா? யக்ஞத்தோடு சம்பந்தமில்லாமல் நம் வாழ்க்கை இருந்ததென்றால், அது நல்ல முறையிலே அமையுமா? நான் சொன்னேன் என்று குடத்து ஜலத்தை எடுத்து வந்துவிட்டாயே! கொஞ்சம் யோசனை பண்ணிப் பார். நீ என்ன நினைத்தாய்...? இந்த யக்ஞத்திலே நாம் சேர்க்கிற அளவுக்குத்தான் அந்த தேவதைகளுக்குப் போகிறது என்று நினைத்தாயா...? போதுமோ போதாதோ என்ற சந்தேகம் வந்தா...? அப்படி அல்ல...யக்ஞத்திலே நீ எவ்வளவு சொற்பமாக தியாகம் பண்ணினாலும் அது அந்தத் தேவதைக்கு எவ்வளவு இருந்தால் போதுமோ அவ்வளவாக மாற்றித் தருகிறது. அதுதான் விசேஷம். அந்தத் தேவதைக்குத் தேவையான அளவை நம்மால் சேர்ப்பிக்க முடியுமா! ஒரு நாளும் முடியாது. ஆனால் அக்னியில் சமர்ப்பிக்கப்படுவது பல மடங்கு விருத்தியாகி பூரண திருப்தியைக் கொடுக்கிறது. பரிபூரணமாய்ப் போய்ச் சேர்கிறது."

அவர் சாமானியமாக இந்த விளக்கத்தை ஒப்புக் கொள்ளவில்லை! "அக்னி அதை அதிகமாய் மாற்றுகிறது என்பதை நாம் எப்படிச் சொல்ல முடியும்?" என்று கேட்கிறார்.

"ஒரு விவசாயி நிலத்தைப் பயிரிடுகிறார். ஆறு மரக்கால் நெல் விதையை எடுத்து நாற்று விட்டு நடவு நட்டு மூன்று மாதம் சம்ரக்ஷித்து அப்புறம் அறுவடை பண்ணுகிறார். இவர் பூமியில் தியாகம் பண்ணுவது ஆறு மரக்கால் நெல்... இவர் அறுவடை பண்ணுவதோ 32 கலம் நெல்! அழகாக எடுத்து மூட்டை கட்டி கிருஹத்துக்குக் கொண்டு போகிறார்.

"பூமியில் தியாகம் பண்ணின ஆறு மரக்கால் நெல்லே திரும்பி வருமானால் விவசாயம் நடக்குமா உலகத்திலே! பல மடங்கு விருத்தி ஆவதால் அல்லவா விவசாயம் நடக்கிறது!"

- வேதம் சொன்ன இந்தப் பதிலைக் கேட்டும் அவர் திருப்தி அடைந்து விடவில்லை... மேலும் ஒரு சந்தேகத்தைக் கேட்கிறார்.

(வளரும்)

# தோழி!

இசைக்கு வேறு எந்த இதழையும் விடவும் கல்கி கொடுத்து வரும் முக்கியத்துவம் அலாதியானது.

இசை விமர்சனங்களையும் சராசரி வாசகனுக்கு ஏற்றாற்போல் நயம்பட எழுதியவர் அமரர் கல்கி. அவர் வழியில் இன்றைக்கும் இசைக் கட்டுரைகளில் தன் கௌரவத்தை நிலைநாட்டி வருகிறது கல்கி.

எல்லா வயதினருக்கும் ஏற்ற பல்சுவைகளையும் கொண்ட கல்கியைப் புரட்டும்பொழுது நெருங்கிய தோழியுடன் அளவளாவும் உணர்வு ஏற்படுகிறது. அது ஒன்றே நம் மனதை சிறகடித்துப் பறக்க வைக்கிறது.

**- நித்யஸ்ரீ மகாதேவன்**

படம்: **ஸ்ரீஹரி**

